# எனக்கு இன்னுமொரு பாரி மிட்டாய் தா!




குழந்தைகள் எப்போதும் விரும்புவது பாரி மிட்டாய்கள். அவர்கள் இழக்கும் சக்தியை திரும்பவும் உடனுக்குடனே வழங்குபவை பாரி மிட்டாய்கள். அவை புத்தம் புதியவை. சத்துள்ளவை. ருசிமிக்கவை.

தயாரிப்போர்: பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், டேர் ஹவுஸ், சென்னை 1

PRS-6396

# எஸிஸி அக்கோப்ரூஃப் தண்ணீரை அண்ட விடுவதில்லை



அக்கோப்ரூஃப், சிமெண்ட் மார்ட்டர் அல்லது சிமெண்டை நீர் புகமுடியாத தாகச் செய்யும். எஸிஸியின் சிமெண்ட் வாட்டர்ப்ரூஃபில் அடிட்டிவ் ஆகும். அது உங்கள் கட்டிடத்தைப் பாதுகாத்து சுவரைகளை வாட்டர்ப்ரூஃப் தன்மையுடையதாகச் செய்கிறது. பின்வருவனபோன்ற நீர்த்தேக்க நிர்மாணங்களில் பயனுள்ளமுறையில் விசேஷமாக உபயோகிக்க உகந்தது அக்கோப்ரூஃப்—

- □ நீர்த்தொட்டிகள்
- □ ரிஸர்வாயர்கள்
- □ நீர்க்குழாய்கள்
- □ வடிகால்கள்.

உங்கள் தேவைகளுக்கு அருகாமையிலுள்ள எஸிஸி ஸ்டாக்கிஸ்ட் அல்லது தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்டை அணுகுங்கள்.
தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிட்., தூஸ்பில்டிங்ஸ், 175/1, மவுண்ட் ரோடு மதராஸ்.

**எஸிஸி** தரத்தில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட் • தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்.




# இப்போது புத்தம் **புதிய** பாக்கெட்டில் உங்களுக்கு கிடைக்கிறது




# ஓஓபி நீலம்

## "மனதிற்குகந்த தூய வெண்மை தருகிறது"

ஓ ஓ பி நீலம் முழுவதும் உடனடியாக கரைந்துவிடுகிறது.

வெள்ளைத்துணிகள் மேலும் பால்போன்று வெண்மையாகின்றன.

நீலப்புள்ளிகளோ மஞ்சள்நிற திட்டுகளோ விழுவதில்லை.



ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவோடு இந்தியாவில் மிகவும் நவீனமான அல்டிராமரைன் தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது.

தயாரிப்பாளர்கள்:
அல்டிராமரைன் அண்டு பிக்மெண்ட்ஸ் லிமிடெட்
அம்பத்தூர், சென்னை-53

UPL-6345

# உங்கள் குழந்தை பள்ளி செல்கின்றதா? வெற்றிகரமான வாழ்வைத் தெம்புடன் தொடங்க ஃபெர்ராடால் கொடுங்கள்

உங்கள் செல்வன் பிள்ளைப் பிராயத்தில், படிப்பிலும் விளையாட்டிலும் சிறந்து விளங்க அதிக சக்தி மற்றும் அதிக ஆற்றல் பெற்றிருக்கவேண்டும்.

அந்த அனைத்தையும் அளிப்பது ஃபெர்ராடால் ஒன்றுதான். இதனால், சரியான விகிதத்தில் இரும்புச் சத்து, விடமின்கள் மற்றும் தாதுச் சத்துக்கள் உங்கள் செல்வனுக்குக் கிடைக்கின்றன.

ஃபெர்ராடாலில் உள்ள சத்துக்கள் உங்கள் செல்வனின் உடல் உறுப்புகள் ஆக்கம் பெற்று ஆரோக்கியமுடன் வளர மிகமிக அவசியமானவை.

உங்கள் குழந்தைக்குக் காலையிலும், இரவிலும், நேரடியாக பாட்டிலிலிருந்தோ அல்லது பாலுடன் கலந்தோ, ஃபெர்ராடால் கொடுங்கள்.

நினைவிருக்கட்டும், குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியம் தருவது ஃபெர்ராடால்.






## ஃபெர்ராடால்®

சுவையில் சிறந்தது—குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியத்திற்கு

பார்க்-டேவிஸ் தயாரிப்பு

® ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க்,
ரெஜிஸ்டர்டு யூஸர்: பார்க்-டேவிஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய்-72 ஏ.என்

JAISONS – 418


LUX

# ஒரே இனம்: ஒரே மக்கள்



"ஒரே கொடியின் கீழுள்ள ஒரே நாட்டு மக்களிடையே நிறைய ஒற்றுமை இருக்கிறது. நாட்டின் மீது ஒன்றாக மெய்ப்பற்றுக் கொண்டு, இந்தியா ஒரே நாடு என்று நம்புகிறவர்களிடம் சிறுபான்மையோர் அல்லது பெரும்பான்மையோர் என்னும் பிரச்சினையே எழ முடியாது. எல்லோரும் சமமான சலுகைக்கும் சமமாக நடத்தப்படுவதற்கும் உரிமை உடையவர்கள். நமது கருத்திற்கிசைந்த நாடு, அதன் ஒவ்வொரு அங்கமான பிரதேசங்களுக்கிடையே முற்றிலும் ஒற்றுமையுள்ள மதச்சார்பற்றதாயிருக்க வேண்டும்; குடியரசு நாடாகவும் இருக்க வேண்டும்."—மகாத்மா காந்தி






இண்டியன் ஆக்ஸிஜென் லிமிடெட்

பாதுகாப்பிற்கு
ஒரு பூட்டு உள்ள
தெனில் அது
நவ-தால் ஒன்றே
ஒன்றுதான் !




# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற் சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோ கிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப் பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற் கேற்ற முறையில் செய்யப் பட்டது நவ-தால். பித்தளை, எஃகிலுமான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்கு கிறது. தயாரிப்பவர்கள்: கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்ப தில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடைய வர்கள்.

4 சைஸ்கள் :
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
86 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நம்பகமான பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்



# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, வைகாசி 30 — ஜூன் 13, 1971




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்பெயர்களே சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |




# கிளீயர்டோன்-உன்னத மின்சார சாதனங்கள்

கிளீயர்டோன் எல்லாவித மின்சார சாதனங்களுக்கும் ஈடற்ற பேர் பெற்றது. அனைத்துமே நம்பகம், உறுதி, நீடித்த உழைப்பு ஒருங்கிணைந்தவை. நாடெங்கிலுமுள்ள பல்லாயிரம் இல்லத்தரசிகளின் பாராட்டுப் பெற்றவை. ஒவ்வொரு தயாரிப்பும் ஆண்டுக் கணக்கான அனுபவ நுட்பத்தையும், தொழில் நுணுக்கத்தையும் பின்னணியாகக் கொண்டவை.

உங்கள் இல்லங்களுக்கேற்ற கிளீயர்டோன் மின்சார சாதனங்களையே வாங்குவீர். அது நீங்கள் அளிக்கும் பணத்திற்கும் பன்மடங்கான பலனையே தருகிறது.

நாடு பூராவும் உள்ள 1500-க்கும் அதிகமான கிளீயர்டோன் விற்பனையாளர்கள், விற்பனைக்குப் பின்னும் எப்போதும் சேவைசெய்ய காத்திருக்கிறார்கள்.

இஸ்திரி பெட்டிகள்

ஹாட் பிளேட்கள்

சுப்ரீம் கெட்டில்கள்

பிரஸ் லிப்ட் டோஸ்டர்கள்

பேக்கிங் ஓவன்கள்

குக்கிங் ரேஞ்சுகள்

ஸாஸ்பான் கெட்டில்கள்

வாட்டர் ஹீட்டர்கள்

வாட்டர் பாய்லர்கள்

ஹாட் ஃபுட் கேபினட்கள்

சுவர்க் கடிகாரங்கள்

**நேஷனல் ரேடியோ அண்டு எலக்ட்ரானிக்ஸ் கம். லிட்**
(ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் பிரிவு) பம்பாய்-கல்கத்தா-டெல்லி-சென்னை.

ULKA KL-7-TH

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்









# சுற்றந்தழால்

'செல்வம் படைத்தவர்கள், அந்தச் செல்வத்தை ஒரு பொதுச் சொத்து போல் கருத வேண்டும்; தமது செல்வத்தை அனைவருக்கும் பயன்படுத்தும் தர்மகர்த்தர்களாகவே தங்களைக் கருத வேண்டும்; சர்க்காரின் தலையீடு இல்லாமல் இவ்வாறாகப் பணக்காரர்கள் தாமாகவே பொது நலனை விளைவிக்க வேண்டும்' என்று காந்திஜி உபதேசித்தார். பணக்காரர்கள் இதைக் கடைப்பிடிக்க வேண்டுமாயின் அவர்களுக்கு மிகுந்த கருணையும், ஒழுக்கமும், எளிமையும், தெய்விக குணமும் இருக்க வேண்டும். இது சாத்தியமில்லை. எனவே பல காரணங்களால் காந்திஜி விரும்பிய அடிப்படை இன்று வழக்குக்கு வர முடியாமல் தோல்வி கண்டுவிட்டது என்றே கூறலாம்.

பொது நலனுக்கு மற்றொரு வழியாகக் கூறப்படுவது சர்க்காரின் சர்வாதினம். சட்டம் போட்டு வலுக்கட்டாய முறையில் பொருளாதார ஏற்றத் தாழ்வை அகற்ற முற்படும் சர்வாதினக் கொள்கையை சர்க்கார் ஏற்றிருக்கிறது. ஆனால் இதனால் மிகுந்த விரயமும், ஊழலும், யதேச்சாதிகாரமும் உண்டாகி, நிகர விளைவில் எந்த நற்பலனும் உண்டாகவில்லை எனக் காண்கிறோம்.

ஐம்பது கோடிக்கு அதிகமான மக்களின் நலனைச் சர்க்காரே நிர்வகிப்பது என்பது இயலாத காரியம். இவ்வளவு பெரிய மக்கட் தொகைக்கு காந்திஜியின் தர்மகர்த்தக் கொள்கையைப் பொருத்துவதும் சிரமம். எனவே அகில தேசிய ரீதியில் அல்லாமல், பொது நலனுக்கு வேறு ஓர் அடிப்படையில் வழி காண வேண்டும். தனிமனிதனின் கட்டுப்பாடற்ற சுதந்திரத் தனி வாழ்வுக்கும், இச் சுதந்திரத்தைப் பூரணமாக நிராகரிக்கும் அகில தேசிய அடிப்படைக்கும் இடைநிலையாக ஒரு மார்க்கத்தை அநுசரிக்க வேண்டும்.

இந்தியாவில் தொன்றுதொட்டு இப்படிப்பட்ட ஓர் இடைநிலை மார்க்கம் உள்ளது. அதற்குத்தான் இன்று 'வகுப்புவாதம்' என்று பெயரிட்டு ஓயாமல் தூற்றி வருகிறார்கள். இது தேச நலனுக்கு விரோதமானது என்று கண்டித்து வருகிறார்கள்.

மக்கள் பல வகுப்புகளாகப் பிரிந்திருந்து, அந்தந்தப் பிரிவினரும் வகுப்புப் பற்றுக் கொண்டிருப்பது காரணமாகத் தேச நலனும், நிர்வாக நேர்மையும் பாதிக்கப்படுமாயின், இப்படிப்பட்ட வகுப்புப் பற்று தவறேயாகும். ஆனால் இந்தப் பற்றை நடைமுறையில் தேச நலனுக்கு உபயோகமாகும்படி ஒழுங்குபடுத்த முடியுமாயின் அவ்விதம் செய்வதே உகந்தது. ஒரு தேசத்தின் தனிப் பண்பில் பிறந்த சில அமைப்புக்களில் பிரதிகூலங்கள் இருப்பினும், அவற்றை உரியபடி வளர்த்தால் தேசம் முழுவதற்கும் அநுகூலம் உண்டாகும். நமது தேசத்தில் ஏற்பட்டுள்ள வகுப்புப் பற்றை இவ்விதம் பொது நலனுக்கு இசைவாக ஊக்க முடியும்; ஊக்க வேண்டும். முப்பத்தேழாண்டுகளுக்கு முன்பு திருக்குறளில் பொருட்பாலைப் பற்றி ஆங்கிலப் புத்தகம் நான் எழுதிய போது 'சுற்றந்தழால்' என்ற அதிகாரத்தைப் படித்தேன். அதிலிருந்து இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன்.

ஒருவர் தமது சொத்துக்களைக் கொண்டு சுற்றத்தினரை யெல்லாம் பேண வேண்டும் என விதிக்கிறது திருக்குறள். இந்த அடிப்படையிலேயே தொன்றுதொட்டு இந்தியாவில் பெரிய அவிபக்த குடும்ப அமைப்பு நடந்து வந்திருக்கிறது. இது தனிமனிதனின் முயற்சிக்குக் குந்தகம் விளைவிக்கிறது என்பது சீர்திருத்தக்காரர்களின் கருத்து. உண்மையிலோ, இந்திய நாகரிகம் போட்டி அடிப்படையில் அமைந்த தனிமனித முயற்சியை அடியோடு நிராகரித்து விடவில்லை; பூரணமாக ஏற்கவும் இல்லை. சுற்றத்தினர் பலர் ஒன்று கூடி வாழும் குடும்பங்களாகச் சமூகம் பிரிந்திருந்தது. குடும்பத்துக்குள் இருக்கும் அங்கத்தினர்கள் தமக்குள் போட்டியிட்டுச் சமமாக உழைக்கவில்லை. ஆயினும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் ஒரே ரீதியில் நடத்தப்பட்டனர்.

இக் குடும்பங்கள் ஒன்றோடு ஒன்று சுதந்திரமாகப் போட்டியிட்டு முன்னேறின. தேசமும் முன்னேறியது.

இவ்விதமாகக் குடும்ப எல்லைக்குள் அனைவரும் ஒரேவிதமாக நடத்தப்படும் சோஷலிஸத்தைக் கண்டோம். அதேபோதில் சுதந்திரமான சமூக முன்னேற்றத்தையும் கண்டோம்.

ஒரு குடும்பத்தின் அங்கத்தினர் அதில் இருக்குமாறு சட்டப்படி நிர்ப்பந்திக்கப்படவில்லை. அதைவிட்டு ஒருவர் வெளியேறவும் செய்யலாம். ஆயினும் அதில் இருக்கிறவரையில், அவரை மற்றவருக்குச் சமமாகவே நடத்தி வந்தனர். சம்பாதிப்பதில் விசேஷத் திறன் உள்ளவர், பிறரோடு அதைப் பகிர்ந்து கொள்ள விரும்பாமல், குடும்பத்திலிருந்து தனியாகப் பிரிந்து செல்வது ஒரு குற்றமாகவே கருதப்பட்டது. இதனை ஒருவிதக் கட்டுப்பாடு எனலாம்.

தனிமனித சுதந்திரத்துக்கும், சர்க்கார் சர்வாதிபத்தியமான கம்யூனிஸத்துக்கும் இடைநிலையில் இருப்பது 'சுற்றம் தழால்' கொள்கை. குடும்பத்தைச் சார்ந்தே ஒருவர் வாழ்வது தவறு எனில், சர்க்காரைச் சார்ந்தே வாழ்வது அதனினும் பெரிய தீமை எனலாம்.

எனவே 'சுற்றம் தழால்' அடிப்படையில் உரிய மாறுதல்களைச் செய்து பின்பற்றுவது நம் தேசத்தில் மனித இயற்கைக்கு இசைவாக இருக்கும். சுற்றம் என்றால் உறவினர் என்று மட்டும் பொருள் கொள்ள வேண்டியதில்லை. சுற்றியிருக்கும் மக்கள் அனைவரும் சுற்றமே. இந்த மனோபாவத்திலேயே சிறு சிறு சமுதாயங்களும், ஜாதிகளும், அவற்றின் உட்பிரிவுகளும் தோன்றி, அந்தந்தப் பிரிவினருக்குள் ஒரு தனிப்பட்ட பாசமும் பற்றும் வளர்ந்து வந்திருக்கின்றன. ஒவ்வொருவரும் தம் குடும்பத்திடம் வைக்கும் பற்றுதல் தேச நலனுக்கு விரோதமானது என்று யாருமே இன்றுவரை கருதவில்லை. இந்தக் குடும்பத்தையே இன்னும் விஸ்தரித்தால் உண்டாகும் சமூகத்தின் சிறு பிரிவுகள் தங்களுக்குள் கொண்டுள்ள பற்றுதலைத் தேச நலனுக்கு விரோதமானது என்று கருதுவது தப்பு. இயற்கையாக ஏற்பட்ட ஒன்றைப் புறக்கணிப்பது வீண் முயற்சியே.

ஒரு குடும்பத்தின் உழைப்பில் போதிய பங்கு பெறாதவர்களையும் அக்குடும்பம் சம்ரட்சித்தபோது அரசாங்கத்துக்கு எவ்வித நஷ்டமும் இல்லை. ஆனால் சர்க்காரே எல்லோர் நலனையும் நிர்வகிக்கும் போது, பொதுப் பணத்தைக் கொண்டே இவ்விதச் செலவு செய்யப்படுகிறது. தங்கள் 'சுற்றத்தினரை' ஒருவர் பராமரிப்பதில் உள்ள தார்மிகக்கட்டுப்பாட்டு உணர்வும், இயல்பான பாச உணர்வும் சர்க்கார் நிர்வாகத்தில் இல்லை. பாசத்தோடு உதவி புரிந்து கொள்வதில் வாழ்க்கையே ஆனந்தமாகிறது. காகம் கரைந்துண்டு களிப்பது போல், மக்களும் சுற்றத்தோடு சேர்ந்து இன்பங்களைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்றார் பொய்யாமொழி முனிவர்.




நம் நாட்டின் ஐம்பது கோடி மக்களில் பெரும்பாலாக உள்ள ஏழைகளுக்கு சோஷலிஸம் என்கிற மந்திரக் கோலை வீசிச் சுபிட்சம் உண்டாக்க முடியாது. 'கடும் வரி போட்டு ஏழைகளுக்கு உதவி செய்வோம்' என்கிற கொள்கை நடைமுறையில் வரிச்சுமை காரணமாக அனைவரையும் பிச்சைக்காரர்களாக்குவதில்தான் முடிந்திருக்கிறது. முயற்சித்

★

## வாழ்க பல்லாண்டு!

தமிழக முதல் மந்திரி கலைஞர் திரு மு. கருணாநிதி அவர்களின் நாற்பத்தெட்டாவது பிறந்த தினம், பிச்சைக்காரர் மறுவாழ்வு தினமாக மாநிலமெங்கும் வெகு சிறப்புடன் கொண்டாடப் பெற்றது. பொதுக் கூட்டங்களும் நடைபெற்றன. கவர்னர் திரு கே. கே. ஷா முதன் மந்திரிக்கு மாலை அணிவித்து வாழ்த்தினர். முதன் மந்திரிக்கு நமது நல் வாழ்த்துக்களை அளிக்கிறோம்.

★



திறன் உள்ளவர்களின் ஊக்கத்தையும் கௌரவத்தையும் குலைத்து, அவர்களும் சர்க்காரைச் சார்ந்திருக்கும் பிச்சைக்காரர்களாகுமாறு செய்வது மானத்துக்குச் சற்றும் உதவாது.

காந்திஜி தர்மகர்த்தக் கொள்கையை விரிவுபடுத்தி நடைமுறைத் திட்டமாக உருவாக்கவில்லை. இருப்பினும் அவரது சித்தாந்தத்தின் சாரம் இதுவே: ''சர்க்கார் என்பது நிர்ப்பந்தத்தின் உருவம். குடும்பம் என்பது அன்பு, தயை இவற்றின் வடிவம். தேச விவகாரத்தை நிர்ப்பந்த முறையில் நிர்வகிக்காமல், அதிலும் குடும்ப உணர்வே நிலவவேண்டும்.'' ஆனால் ஐம்பது கோடி மக்களை — ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்துவர், பார்ஸி என்று பிரிந்துள்ள பெரிய ஜனத் தொகையை — ஒரு குடும்பமாக பாவிக்கச் செய்வது இயலாத காரியம். இந்த தேசிய குடும்பத்துக்குள், தொன்று தொட்டு வழக்கில் வந்துள்ள வகுப்புக்களிடை குடும்ப மனப்பான்மை இன்றும் ஓரளவு இருந்து கொண்டே இருக்கிறது. இந்தப் பிரிவுகளுக்குள், பணம் படைத்தவர்கள் காந்திஜியின் தர்மகர்த்தக் கொள்கையைப் பின்பற்றுமாறு ஊக்குவித்தால் மொத்தத்தில் தேச நலனுக்கே அது உதவும்.

பல அங்கங்கள் சேர்ந்தது ஒரு முழு உருவம். அந்தந்த அங்கமும் நன்றாக இருந்தால் முழுமையும் நன்மை பெறும். நமது சமூகப் பிரிவுகள் ஒவ்வொன்றும் தன்னை முன்னேற்றிக் கொள்ள உதவி புரிந்தால் நாடனைத்தும் நன்மை பெறும். வசதியற்ற பிரிவுகளை மட்டும் சர்க்கார் கவனித்துக் கொள்ளலாம்.

எத்தனை கண்டனம் செய்த போதிலும் வகுப்புப் பாசத்தை அகற்ற முடியவில்லை என்பதைப் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம். வகுப்புப் பிரிவுகள் என்ற ''விஸ்தாரக் குடும்பங்களுக்குள்'' இன்னும் பாச உணர்வு நிலவத்தான் செய்கிறது. எனவே வெவ்வேறு வகுப்புக்களின் நலனுக்காக ஏற்பட்டுள்ள தர்ம ஸ்தாபனங்களுக்கு அரசாங்கம் ஊக்கமும் உதவியும் அளிக்க வேண்டும். தனிப் பட்டவரின் நலனுக்காகவே ஒரு வகுப்பு ஸ்தாபனம் நடத்தப்பட்டால் அதற்குச் சர்க்கார் எவ்விதச் சலுகையும், உதவியும் தரக்கூடாது.

நமது சமூகப் பிரிவுகள் காந்திஜியின் தர்மகர்த்தக் கொள்கையை ஏற்குமாறு செய்து, வகுப்புப் பற்றையே தேச நலனுக்குதவும் கருவியாக்க முயல்வோமாக.

(ராஜாஜி ''ஸ்வராஜ்யா''வில் எழுதியது.)

# மாணவர்களுக்கு லஞ்சமா?

எந்த சமூகத்தைச் சேர்ந்தவராயினும், எத்தனை வருமானமுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவராயினும், ஒரு மாணவர் பட்டப் படிப்பைத் தமிழ் பயிற்று மொழியில் மேற்கொண்டால் அவருக்கு வருடம் 180 ரூபாய் உபகாரச் சம்பளம் வழங்க உத்தேசித்திருக்கிறது தமிழக அரசாங்கம். புகுமுக வகுப்பைத் தமிழில் கற்கும் மாணவருக்கு ரூ. 50 வழங்கவிருக்கிறது. சென்ற ஆண்டு தமிழில் பட்டப் படிப்பைத் தொடங்கியவர்களுக்கும் இவ்வருடத்திலிருந்து உபகாரச் சம்பளம் அளிக்கப்படுமாம்.

அதாவது, மாணவர்கள் கல்லூரிக் கட்டத்தில் ஆங்கிலத்தை விட்டுவிடுவதற்காக அவர்களுக்கு லஞ்சம் தருகிற திட்டத்தில் தமிழ் நாட்டுச் சர்க்கார் இறங்கியுள்ளது. தங்கள் நலனை உணர்ந்துள்ள மாணவரும், அவர்களின் பெற்றோரும் ஆங்கில போதனையையே

பெருவாரியாக ஆதரிக்கின்றனர் என்று தகுதி வாய்ந்த கல்வித் துறை நிபுணர்கள் நடத்திய ஆராய்ச்சிகளிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. எனவேதான், சர்க்கார் தனது கொள்கை வெற்றிகரமாக நடந்ததெனப் பிரமாதப்படுத்துவதற்காக இக் காரியத்தை மேற்கொண்டுள்ளது. வாக்காளர்களுக்குப் பல விதங்களில் லஞ்சமளிக்கும் அரசாங்கம், இப்போது மாணவர்களையும் லஞ்சத் திட்டத்துக்கு ஆட்படுத்தியுள்ளது.

- ராஜாஜியின் கருத்து

# இது அல்ல தருணம்!

**ம**த்திய — மாநில அதிகாரங்கள் பற்றி நிறைய விவாதம் நடை பெற்று வருகிறது. பொதுவாக மாநிலங்களில் ஆட்சி புரியும் அரசியல்வாதிகள் நேர்மையுடன் நடந்தார்களாயின் — மாநிலங்களில் சட்டமும் சமூக ஒழுங்கும் திருப்திகரமாக இருக்குமாயின் — மாநில சர்க்கார்களிடம் அதிக அதிகாரங்களை ஒப்புவிப்பது நன்மையே பயக்கும். ஆனால் இப்போது மாநிலங்களில் நாம் இத்தகைய நல்ல நிலைமையைக் காணவில்லை. பொது நலனைவிடச் சொந்த முன்னேற்றத்தையே கருதி, 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்கிற' அரசியல்வாதிகளே மாநிலங்களில் பெருவாரியாக ஆட்சியதிகாரம் பெற்றிருக்கிறார்கள். அநேக மாநிலங்களில் சமூக ஒழுங்கும் திருப்திகரமாக இல்லை. இன்று பலவித இடுக்கண்களில் சிக்கியிருக்கிறோம். எனவே மத்திய அரசாங்க அதிகாரத்தைக் குறைத்துப் பரிட்சை பார்ப்பதற்கு இது சமயமல்ல. இன்று ஒரு காரியத்தைச் செய்தால் நன்மை பயக்கக்கூடும்; அதே காரியத்தை நாளைக்குச் செய்தால் தீமை ஏற்படக்கூடும். கால மறிந்து செயல்பட வேண்டும். எனவே சாதாரண காலங்களில் மாநிலங்கள் நிறைய அதிகாரம் பெற்றிருப்பதை ஆதரிக்கலாமாயினும், இன்றுள்ள நிலையில் இதனை வரவேற்பதற்கில்லை.

- ராஜாஜியின் கருத்து

# தில்லி பட்ஜெட்

“தர்மம் புரிவதே மனிதனின் கடமை; அதன் பலனை எண்ணுவது அவன் பொறுப்பல்ல” என்ற கீதா வாசகத்தை விநோதமான முறையில் கடைப்பிடித்திருக்கிறார் மத்திய நிதி மந்திரி. “வரி விதிப்பதே என் கடமை; வரி விதிப்பால் ஏற்படும் விளைவுகளில் எனக்குக் கருத்து இல்லை” என்கிற ரீதியில் பட்ஜெட் போட்டிருக்கிறார்.

நிதி அமைச்சகம் பட்ஜெட் போடும்போது 'செலவு இவ்வளவு செய்ய வேண்டும், எனவே வரவு இத்தனை இருக்க வேண்டும்' என்று வெறும் கணித ரீதியில் கணக்குப் போட்டால் போதுமானதாயிருக்கிறது! ஆனால் பட்ஜெட்டின் விளைவுகளை அறிவதற்குக் கணித அறிவு மட்டுமின்றி, மனித இயல்பைக் குறித்தும் பொருளாதார நியதிகள் குறித்தும் மிகுந்த விஷய ஞானம் வேண்டும்.

'நிதிக் கொள்கை என்பது சர்க்காரின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் முறையில் வரி போடுகிற சாதாரண விஷயம் அல்ல; அது பெரிய இலட்சியங்களை நிறைவேற்ற வேண்டும்; தேசப் பொருளாதாரம் உயர்வதற்கு உரிய முறையில் வழிகாட்ட வேண்டும்' என்றெல்லாம் நிதிமந்திரி உயர்ந்த அரசியல் தத்துவங்களைக் கூறியிருக்கிறார். ஆனால் நடைமுறையில் பட்ஜெட் இந்த இலட்சியத்துக்கு இம்மியும் அநுசரணையாக இல்லை.

வரி விதிப்பு மிகவும் உயர்ந்துவிட்டதால் உற்பத்தி வெகுவாகக் குறையும்; எனவே இந்தக் குறைந்த உற்பத்திப் பொருள்களிலிருந்து பெறுகிற வரி வருமானமும் முன்னைவிடக் குறையத் தொடங்கும்; விலைவாசிகள் ஏறும்; நிர்வாகச் செலவுகள் பெருகும்; பொருளாதார ஏற்றத் தாழ்வும் அதிகரிக்கவே செய்யும்; மக்களின் அதிருப்தி அதிகரிக்கும்; ஜனநாயகத்திலேயே நம்பிக்கை குன்றத் தொடங்கும்.

நிதி மந்திரி, சர்க்காரின் வரவையும் செலவையும் ஈடுகட்டுவதற்குக் காகிதத்தில் கணக்குப் போட்டால் போதும். ஆனால் குடிமக்கள் தங்கள் வரவு செலவுகளைக் காகிதக் கணக்கால் சரிப்படுத்திக் கொள்ள முடியாது. வரியை ஏய்த்துப் பலவித ஒழுங்கீனங்களையும் குற்றங்களையும் செய்தாலே வாழ முடியும் என்கிற நிலைமையை பட்ஜெட் உண்டாக்கி விட்டது.

இத்தனை செய்தும் வருட இறுதியில், பட்ஜெட் மதிப்பிட்டபடி வருமானம் இராது. உத்தேசித்த வரவுக்கும் உண்மையான வரவுக்கும் பெருத்த இடைவெளி இருக்கும். இன்றைய சர்க்காரின் கொள்கை மாறுதவரையில், அதன் நிதி நிலைமை இவ்வாறுதான் இருக்கும்.

ரொட்டி, சோப்பு, ரெடிமேட் துணி, சிகரெட், பெட்ரோல் முதலிய பண்டங்களின் மேல் வரி உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் வரி விதிப்புக் கூடுதலாகியிருப்பதைக் காட்டிலும் மிக அதிகமாக இவற்றின் விலைகள் உயரும். அதோடு மட்டுமின்றி விலை உயர்வு என்பது தொத்து வியாதி போன்றது. ஒரு பண்டத்துடன் தொடர்புள்ள மற்றப் பண்டங்களின் விலைகளும் உயரும். ஒரு பொருளின் விலை உயர்ந்துவிட்டது என்பதால், மக்கள் அதனை வாங்குவதை நிறுத்தி, அதனிடத்தில் இன்னொரு பொருளை வாங்கும்போது, இந்தப் புதுப் பொருளின் விலையும் உயரும். சிகரெட் விலை உயர்ந்தால் பீடி விலையும் உயரும்; லாரி, டாக்ஸி கட்டணம் உயர்ந்தால் மாட்டு வண்டி, ஜட்கா கூலியும் உயரும். மொத்தத்தில் இந்த பட்ஜெட் ஏழை மக்களுக்குப் பாதகமானது.

- ராஜாஜியின் கருத்து

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது

# ஒகாஸா



வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்களுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின் லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. அல்லது நேராகவும் பெறலாம்.

**OKASA CO. PVT. LTD.**
P. O. BOX 396, BOMBAY-1.

CU 220

## ஸ்ரீ சங்கர வித்யாலயம்

**1, காமராஜர் சாலை**
**ராமகிருஷ்ண நகர் - சென்னை-28**

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்கள் அருளாசியுடன் ஸ்ரீ சங்கர வித்யாலயம் ஓராண்டாக நடைபெற்று வருகிறது.

இப் பாடசாலையின் நோக்கம் மாணவர்களுக்கு நம் பழைய மரபுகளில் உள்ள உன்னத அம்சங்களுடன் சிறந்த கல்வியை அளிப்பதேயாம்.

இப்பாடசாலை தற்போது, 4, 5, 6, 7-ஆம் வகுப்புக்களுடன் நடைபெற்று வருகிறது. இது உரிய காலத்தில் முறையாக உயர் செகண்டரி கல்வியின் மத்தியக் குழுவுடன் இணைக்கப்படும்.

இங்கு போதனமொழி ஆங்கிலம் ஆகும். சம்ஸ்கிருதமும், தமிழும், ஹிந்தியும் கற்பிக்கப்படுகின்றன.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை இவ்வித்தியாசாலையில் சேர்க்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**ஜூன் 14-ந் தேதி பள்ளி திறக்கப்படுகிறது**

மேலும் விளக்கங்கள் வேண்டுவோர் கீழ்க்காணும் முகவரியில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

**திரு வி. அருணாஜலம்**
**20, முதல் காலவாய் க்ராஸ் ரோடு**
**காந்திநகர், அடையாறு. சென்னை - 20**



ஸ்ரீ P. P. வெங்கட சுப்ரமணியம் அவர்கள் குமாரத்தியும், லேட் ஸ்ரீ R. சேஷசாயி அவர்களின் பேத்தியுமான சௌ. **வசந்தா**வுக்கும், லேட் ஸ்ரீ V. R. குப்புஸ்வாமி அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி V. K. **சுப்ரமணியன்** B.Sc., B.L., D.S.S.A.க்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் (N) தயாரிப்பு

# மகுடபதி

பத்தாம் அத்தியாயம்

## "உள்ளே தள்ளு!"

அமரர் கல்கி

ஸப் - இன்ஸ்பெக்டர் சங்கட ஹரிராவ் நாயுடுவின் முகத்தில், அவர் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கிளம்பிய போதிருந்தே, ஒருவித கேலிப் புன்னகை குடிகொண்டிருந்தது. அதன் காரணத்தை நாம் அறிய வேண்டுமானால், மகுடபதி டாக்டர் புஜங்கராவ் வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்த சமயத்தில், மேற்படி ஸப்—இன்ஸ்பெக்டரின் வீட்டுக்கு நாம் போக வேண்டும்.

அன்று மாலை நடந்த போலீஸ் தடியடி வைபவத்தில் சங்கட ஹரிராவ் நாயுடுவும் கலந்து கொண்டு தம்முடைய பங்கை நிறைவேற்றி வைத்து விட்டு, இரவு பத்து மணிக்குத்தான் வீட்டுக்கு வந்தார். அவர் வந்த அரை மணி நேரத்துக்கெல்லாம் வாசலில் கார் சத்தம் கேட்டது. உள்ளே வந்தவர் கார்க்கோடக் கவுண்டர்தான். இரண்டு பேருக்கும் ரொம்பவும் சிநேகிதம்.

''என்ன, பிரதர்! என்ன விசேஷம் இந்த நேரத்தில்?'' என்று நாயுடுகாரு கேட்டார். உடனே, எதையோ நினைத்துக் கொண்டு, ''ஓகோ? மறந்தே போய் விட்டேனே? — இந்தக் கலாட்டாவில் உங்கள் காரியம் ஒன்று பார்த்துக் கொள்வதாகச் சொல்லியிருந்தீர்களே? காரியம் ஆச்சா?'' என்று கேட்டார்.

''ஆச்சு — ஆகவில்லை!'' என்றார் கார்க்கோடக் கவுண்டர்.

''அப்படியென்றால் என்ன?''

''பாதி ஆகிவிட்டது. நீ கொஞ்சம் மனசு வைத்தால் பாக்கிப் பாதியும் ஆகிவிடும்.''

''என்ன, பிரதர், புதிர் போடுகிறீர்கள்?'' என்று நாயுடு கேட்டார்.

பிறகு, கார்க்கோடக் கவுண்டர் சாங்கோபாங்கமாக எல்லாவற்றையும் சொல்லிவிட்டு, ''பையனைக் கட்டிப் போட்டுவிட்டு வந்திருக்கிறேன். அவனைத் தூக்குமேடைக்கு அனுப்புவது உன் பொறுப்பு'' என்றார்.

சங்கட ஹரிராவ் நாயுடு, சிறிது நேரம் ஆழ்ந்து யோசித்தார். ''கவுண்டரண்ணே! விஷயம் நீங்கள் சொல்லுவது போல் அவ்வளவு சுலபமில்லை. கொஞ்சம் சிக்கல் இருக்கிறது. பையன் நடந்த விஷயத்தை 'ஸ்டேட்மெண்ட்' கொடுத்தால், சாட்சிக்குப் பெண்ணைக் கூப்பிட வேண்டியதாகும். பெண் எங்கே என்று தேடும்போது வம்பு வந்து சேரும். மேலும் அவன் யாருக்கோ கடிதம் கொடுத்து அனுப்பியதாகச் சொல்லுகிறீர்கள். அதனால் ஏதாவது தொல்லை வந்தாலும் வரும்'' என்றார்.

''என்னப்பா, திடீரென்று உனக்குத் தொடை நடுக்கம் வந்துவிட்டது? இதைவிட எத்தனையோ கஷ்டமான கேசையெல்லாம் சமாளித்திருக்கிறாயே?''

''உங்களுக்குத் தெரியாது, பிரதர்! இப்போது டிபார்ட்மெண்ட் முன்னைப் போல இல்லை. துரை ரொம்பப் பொல்லாதவனாயிருக்கான். ஏதோ இந்தக் காங்கிரஸ்காரர்கள் கலாட்டாவினாலே, நமக்கெல்லாம் டிபார்ட்மெண்டிலே கொஞ்சம் மதிப்பு இருந்து வருகிறது. இல்லாமற் போனால்....''

'' உன் அழுகையை ஆரம்பித்து விட்டாயாக்கும். இப்போது என்ன

தான் செய்யலாம் என்கிறாய்? — நேரம் ஆகிறது.''

''வாஸ்தவம், இங்கே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தால் ஒன்றும் பிடிபடாது. 'ஸ்பாட்'டுக்குப் போய்ப் பார்ப்போம். தடையங்கள் எல்லாம் எப்படி யிருக்கிறதென்று பார்த்துக் கொண்டு தீர்மானிக்கலாம். அந்த லெட்டர் டெலிவரி ஆச்சா, இல்லையா என்று மட்டும் நிச்சயமாய்த் தெரிந்து போய் விட்டால் தேவலை'' என்று சொல்லிக் கொண்டே சங்கட ஹரிராவ் நாயுடு எழுந்திருந்தார்.

இருவரும் காரில் ஏறி, 'ஸ்பாட்'டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே, இவர்களுக்குப் பெரிய அதிசயம் காத்துக் கொண்டிருந்தது. கட்டிப் போட்டிருந்த மருடபதியைக் காணோம்! அதோடு, கிழவனிடமிருந்து முனகல் சத்தம் வந்தது!

கார்க்கோடக் கவுண்டர், டார்ச் லைட்டைப் பெரியண்ணனுடைய முகத்துக்கு நேராகக் காட்டினார். அவனுடைய கண்கள் சிறிது திறந்தன. கவுண்டரின் முகத்தைப் பார்த்து அக் கண்கள் திறுதிறுவென்று விழித்தன. கொஞ்சம் ஞாபகத்தின் அறிகுறி தோன்றியது. கிழவனுடைய வாய் பேசுவதற்கு முயன்றது. மிக மெலிந்த குரலில், ''இரகசியம்... சொல்லாமற் போனால்.... மன்னிக்க வேணும்....'' என்ற வார்த்தைகள் குழறிக் கொண்டு வந்தன. கிழவன் மறுபடியும் ஞாபகத்தை இழந்து விட்டான்.

''கிழவனுக்கு உயிர் ரொம்பக் கெட்டி; கத்தி அதிக ஆழம் போக வில்லை. உடனே சிகிச்சை செய்தால் பிழைத்துக் கொள்வான்'' என்றார் ஸப் - இன்ஸ்பெக்டர்.

கார்க்கோடக் கவுண்டர் நாயுடுவின் முகத்தைப் பார்த்தபடி திகைத்து நின்றார்.

''அண்ணே! வெறுமே திகைத்துக் கொண்டிருப்பதில் பிரயோசனம் இல்லை. பையன் அநேகமாய் ஸ்டேஷனுக்குத்தான் போயிருப்பான். நான் அவனைப் பார்த்துக் கொள்கிறேன். உடனே கிழவனை அப்புறப்படுத்திவிட வேண்டும்....''

கவுண்டரின் முகத்தில் தோன்றிய கேள்விக் குறியைப் பார்த்து விட்டு, ''ஆமாம்; யோசிப்பதில் பிரயோசனம் இல்லை. கிழவனைப் பிழைக்க வைத்து விடுவதுதான் நல்லது. எது எப்படியிருக்குமோ, என்னமோ? பையனை வேறு விதத்தில் சரிப்படுத்திக் கொள்ளலாம்'' என்றார் நாயுடு.

கவுண்டர், ''நீ எப்படி அப்பா, ஸ்டேஷனுக்குப் போவாய்? கொண்டு விட்டுத் திரும்பட்டுமா?'' என்று கேட்டார்.

''வேண்டாம்; ஸ்டேஷன் இங்கிருந்து கிட்டத்தில்தான் இருக்கிறது. நான் போய் விடுகிறேன். உங்கள் வண்டியில் நான் வந்ததாகவே தெரிய வேண்டாம். பையன் அங்கே காத்துக் கொண்டிருந்தால் வம்பு. நீங்களும் அவசரமாய்க் காரியத்தைப் பார்க்க வேண்டும். இங்கே இருக்கிற சமுக்காளம், லாந்தர், பெட்டி, சாமான் ஒன்றும் இருக்கக் கூடாது. எல்லாம் போய்விட வேண்டும்.''

''அதெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். இங்கே ஒரு பிசகும் இருக்காது. நீ மட்டும் உன் காரியத்தைச் சரியாகப் பார்க்க வேண்டும்.''

இந்தப் பேச்சு நடந்து பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு ஸப்—இன்ஸ்பெக்டர் சங்கட ஹரிராவ் நாயுடு போலீஸ் ஸ்டேஷனை அடைந்தார். அங்கே இருந்த ஸ்டேஷன் ஆபீஸர், கான்ஸ்டேபிள்கள் முதலியவர்களிடம், இன்று கலாட்டா நடந்திருக்கிறபடியால், ஏதாவது ஒரு வேளை 'அர்ஜெண்ட் கால்' வரலாம் என்று ஸ்டேஷனுக்கு வந்ததாகச் சொன்னார். பிறகு அவர்களு



டன் அன்றைய சம்பவங்களைப் பற்றிப் பேசிக் கொண்டு, மருடபதியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவன் தனியாய் வந்தால் என்ன செய்வது, யாருடனுவது வந்தால் என்ன செய்வது என்பதைப் பற்றி அவர் மனம் யோசனை செய்து கொண்டிருந்தது.

நாயுடு போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து ஒரு மணி நேரத்துக்கு மேலாகி யிருக்கும். பையன் பயந்து எங்கேயோ போய் ஒளிந்து கொண்டு விட்டான், இனி மேல் வரமாட்டான் என்று அவர் எண்ணத் தொடங்கிய சமயத்தில், டாக்டர் புஜங்கராவும் மருடபதியும் வந்து சேர்ந்தார்கள். ஆகவே, ஸப்–இன்ஸ்பெக்டர், தாம் ஆலோசித்து வைத்திருந்த இரண்டாவது முறையைக் கையாண்டு, அவர்களுடன் அனுமந்தராயன் தெருவுக்குச் சென்றார். மருடபதி அடைந்த ஏமாற்றத்தைத்தான் சென்ற அத்தியாயத்தில் நாம் பார்த்தோம்.

* * *

"என்ன, தம்பி! 'ஜோக்' பண்ணுகிறாயா?'' என்று ஸப் - இன்ஸ்பெக்டர் ஏளனமாய்க் கேட்டதும், மருடபதி அவமானத்தினுல் மனம் குன்றினன்.

டாக்டர் புஜங்கராவ் அப்போது ஸப் – இன்ஸ்





நாயர்: நீ பாசாயிட்டேங்கிறதுக்காக உன் பழைய புஸ்தகங்கள் அத்தனையும் பேப்பர்க்காரனுக்குப் போட்டுட்டு சினிமாவா பார்த்தே? தடிக் கழுதை?

மகன்: என் புஸ்தகங்கள் பத்திரமா இருக்கம்மா. நான் பேப்பர்க்காரனுக்குப் போட்டது சிநேகிதன் பையனுடைய புஸ்தகங்களை.

நாயர்: சரி, சரி! பாக்கி சில்லறை இருந்தால் எடு!





மூன்றாம் வகுப்பு ஆசிரியர் நான்காம் வகுப்பு ஆசிரியரிடம்: "ஓய், நீர் பத்து ரூபாய் எனக்குக் கைமாத்தாத் தரப் போகிறீரா, இல்லை என் வகுப்பில் படிக்கிற ரெட்டையால் மணியைப் பாசாக்கட்டுமா?"



"என் பிள்ளை முதல் வருஷம் பெயிலானதற்கு புதுசான வாத்தியார் சரியில்லே, மாத்துன்னான். மாத்தினேன். அடுத்த வருஷம் பெயிலுக்கு ஸ்கூலே மாத்தணும்னான். ஸ்கூலே மாத்தினேன். இப்போ மூன்றாம் வருஷம் பெயில். ஏண்டான்னா ஊர் சரியில்லே, ஊரையே மாத்துங்கறான்!"



"ஏண்டா பெயிலானே?"

"நான் பாசானா 108 தேங்காய் உடைக்கிறதா வேண்டிண்டீங்களே, உங்களுக்கு 108 தேங்காய் உடைக்க ஏது அப்பா பணம்? உங்களைச் சிரமப் படுத்தவானேன்னுதான்!"

பெக்டரைப் பார்த்து, "நாயுடுகாரு! என் பேரில் பிசகு. இந்தப் பையன் சொன்னதைக் கேட்டு உங்களுக்குத் தொந்தரவு கொடுத்து விட்டேன்; மன்னிக்க வேண்டும்" என்றார்.

"பரவாயில்லை, டாக்டர்! உங்கள் பேரில் 'மிஸ்டேக்' இல்லே. இந்தப் பையன் ஏதோ 'ட்ரிக்' பண்ணுகிறான் என்று அப்போதே எனக்கு 'டவுட்' இருந்தது. நீங்கள் கூட வந்ததனால்தான் கிளம்பி வந்தேன். இவன் கதர் கட்டியிருப்பதைப் பார்த்து நீங்கள் 'டிஸீவ்' ஆகிவிட்டீர்கள்" என்றார்.

மருடபதி டாக்டரை நோக்கி, "இல்லே, டாக்டர்! நான் உங்களை ஏமாற்றவில்லே. சத்தியமாய்ச் சொல்கிறேன். கடவுள் மேல் ஆணையாய்ச் சொல்கிறேன். நான் உங்களிடம் சொன்னதெல்லாம் உண்மை. இந்த அறையில், நீங்கள் இப்போது நின்று கொண்டிருக்கும் இதே இடத்தில் இரண்டு மணி நேரத்துக்கு முன்னால் பெரியண்ணன் கிடந்தான். அவன் மார்பில் கத்தி பாய்ந்திருந்தது. அவன் குத்தப்பட்டு விழுந்ததை இந்தக் கண்களாலே பார்த்தேன்..." என்று ஆத்திரத்துடன் கூறி வந்தபோது நாயுடுகாரு குறுக்கிட்டார்.

"சரிதான், நாயனு, சரிதான்! எல்லாரும் காதாலே பார்ப்பார்கள். நீ மட்டும்தான் கண்ணுலே பார்த்தே! ஒருவேளை 'ட்ரீம்'லே பார்த்தாயோ என்னமோ? இல்லாவிட்டால், டிலிரியம் ட்ரீமன்ஸோ? எப்படியிருந்தாலும் ஸ்டேஷனுக்கு வந்து ஸ்டேட்மெண்ட் எழுதி வைத்துவிட்டுப் போ!" என்று சொல்லிவிட்டு, புஜங்கராவைப் பார்த்து, "வாருங்கள் டாக்டர், போகலாம். மணி ஒன்று அடிக்கப் போகிறது. நல்ல 'வொயில்ட் கூஸ் சேஸ்' இன்று ராத்திரி" என்றார். சங்கட ஹரி ராவ் நாயுடுவுக்கு

உற்சாகம் வந்தால், ஒரே மணிப்பிரவாள நடையில் இங்கிலீஷும் தமிழும் கலந்து பேசுவார் என்பது பிரசித்தமான விஷயம்.

டாக்டர் முன்னால் போகவும் மற்றவர்கள் எல்லாம் அவரைப் பின் தொடர்ந்து போய்க் காரில் ஏறிக் கொண்டார்கள். மோட்டார் போலீஸ் ஸ்டேஷனை அடைந்ததும், டாக்டரைத் தவிர பாக்கி எல்லாரும் இறங்கினார்கள்.

''குட் நைட், டாக்டர்!'' என்றார் நாயுடு.

''குட் நைட், நாயுடுகாரு!'' என்று சொல்லிவிட்டு, டாக்டர் வண்டியை விட்டார்.

''டாக்டர்! நான் சொன்னது அவ்வளவும் சத்தியம். ஏதோ பெரிய மர்மம் நடந்திருக்கிறது. அப்புறம் வந்து சாவகாசமாய்ச் சொல்கிறேன் ......'' என்று மருடபதி இரைந்து கத்திக் கொண்டேயிருக்கையில் வண்டி போய் விட்டது.

ஸப்-இன்ஸ்பெக்டர் ஸ்டேஷனுக்குள் நுழைந்ததும், ''அடே! முந்நூற்று அறுபத்தைந்து! பையனை உள்ளே தள்ளு! கையிலே காப்பை மாட்டு!'' என்றார்.

இந்த மாதிரி ஏதாவது நடக்கும் என்று எதிர்பார்த்த மருடபதி, ''என்னத்திற்காக, ஸார்! என் பேரில் என்ன கேஸ்?'' என்று கேட்டான்.

''என்ன கேஸா? எத்தனையோ இருக்கிறது! போலீசாரிடம் பொய் ஸ்டேட்மெண்ட் கொடுத்த கேஸ்; பூட்டியிருந்த வீட்டுக்குள் பின்புறமாக நுழைந்த கேஸ்; கள்ளுக் கடைக்குத் தீ வைத்த கேஸ்; சட்டத்தை மீறி மறியல் செய்வதற்கு வந்த கேஸ் — இவ்வளவுந்தான்'' என்றார் ஸப்-இன்ஸ்பெக்டர்.

அடுத்த நிமிஷம் இரண்டு போலீஸ் சேவகர்கள் மருடபதியின் கையில் விலங்கை மாட்டி, அவனை லாக் - அப்புக்குள் தள்ளி அடைத்தார்கள். **(தொடரும்)**

---

## திரியம்பகத்தில் சங்கர மண்டபம்

ஆதி சங்கர பகவத் பாதர்கள் பாரதத்தில் உள்ள பன்னிரண்டு ஜோதிர்லிங்க க்ஷேத்திரங்களையும் துதித்துப் பாடியிருப்பதை யொட்டி, இந்த ஸ்தலங்களில் நமது காமகோடி ஆசாரியர்கள் சங்கர மண்டபங்கள் ஸ்தாபித்து வருகிறார்கள். ராமேசவரம், திருவிடைமருதூர், ஸ்ரீசைலம் முதலிய ஜோதிர்லிங்க க்ஷேத்திரங்களில் ஏற்கனவே மடங்கள் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. இவ்வாண்டு சங்கர ஜயந்தியன்று, திரியம்பக க்ஷேத்திரம் எனப்படும் நாசிக்கில் ஸ்ரீ துவாரகா பீடம் சங்கராசாரியர்களான ஜகத்குரு ஸ்ரீ அபிநவ சச்சிதானந்த தீர்த்த ஸ்வாமிகளின் திருமுன்னர் ஸ்ரீ காஞ்சி ஆசாரியாள் திருவுள்ளப்படி அமைக்கப்பட்டுள்ள சங்கர மண்டபத்துக்குக் கும்பாபிஷேகம் சிறப்புற நடந்தேறியது. ஸ்ரீ துவாரகா பீடாதிபதிகள் நான்கு சிஷ்யர்களுடன் கூடிய ஆதி சங்கர மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்து அபிஷேகித்தார்கள். காஞ்சி காமகோடி பெரியவாள் தர்ம ரக்ஷணத்துக்குப் புரிந்து வரும் பேருபகாரம் பற்றி ஸ்ரீ துவாரகா பீடாதிபதிகள் மிகவும் சிலாகித்துப் பேசினார்கள்.






# "தலை போய் விடும்"

சிவ. சந்திரசேகரன்

2

காசியில் ஆல மரத்தடி யோகியைப் பார்ப்பதற்காக ஸ்ரீ காமகோடி ஆசாரியாள் தாமே அவ்விடம் சென்றது போல் வேறு சில சந்தர்ப்பங்களிலும் தம்மிடம் வர இயலாத பக்தர்களின் இருப்பிடத்துக்குத் தாமே எழுந்தருளியிருக்கிறார்.

''இந்த பீடத்திடம் உள்ள கௌரவம் காரணமாகவும், என்னிடம் உள்ள பிரியம் காரணமாகவும் இங்கு எத்தனையோ பேர் வருகிறார்கள். அப்படி வரமுடியாதவர்களும் உண்டு. இங்கு வர முடியாவிடினும் என்னைப் பார்க்க வேண்டும் என்று ரொம்பவும் விரும்புகிறவர்களைப் பார்க்க நானே போவதும் உண்டு'' என்று ஸ்ரீ பெரியவாள் மந்தஹாசத்துடன் கூறி, அப்படிப்பட்ட சம்பவங்களை நினைவுகூர்ந்தார்கள்.

* * *

1923-ம் ஆண்டில் ஸ்ரீ பெரியவாள் திருநெல்வேலிச் சீமையில் சிறப்பாக திக்விஜயம் செய்தார்கள். அப்போது ஸ்ரீவைகுண்டத்துக்கு அருகே அவர் முகாமிட்டிருக்கையில், ஸ்ரீவைகுண்டத்தைச் சேர்ந்த சில ஆடவர்கள் தரிசனத்துக்கு வந்திருந்தார்கள். அவர்கள் ஸ்ரீ பெரியவாளிடம் ஒரு புதுமையான விஷயம் கூறினார்கள். அதாவது அந்த ஆடவர்களின் வீட்டுப் பெண்டிர் ஒருவிதத்தில் மிகவும் கண்டிப்பாக 'கோஷா' முறையைக் கடைப்பிடிப்பவர்களாம். அந்த ஸ்திரீகள் ஸ்ரீவைகுண்டம் கோட்டையைக் கடந்து ஒரு காலும் வெளிவர மாட்டார்களாம். தவறி யாரேனும் ஒருத்தி ஊர் எல்லையைக் கடந்து விட்டால், அந்தச் சமூகத்தினர் அவளது தலையை வாங்கிவிடுவார்களாம்!

இந்த விவரத்தைப் பெரியவாளிடம் கூறிய பக்தர்கள், ''ஆனால் எங்கள் பெண்டுகள் தங்களைத் தரிசிக்க மிகவும் ஆவலாயிருக்கிறார்கள். எங்கள் குடும்பத்து ஸ்திரீகளும் தங்க

யைத் தரிசித்தால்தான் எங்களுக்கும் மன நிறைவு ஏற்படும்'' என்று கூறினர்.

சம்பிரதாயங்களை மீறுமாறு ஒருபோதும் கூறாதவர் ஸ்ரீ பெரியவாள். அதே சமயத்தில் அருள்மூர்த்தியுமாவார். எனவே ஸ்ரீவைகுண்டத்து 'கோஷா'ப் பெண்டிரை அநுக்கிரகிப்பதற்காகத் தாமே அங்கு சென்றார்கள்.

* * *

ஸ்ரீ பெரியவாள் ராமேசுவரத்துக்கு மேனாவில் சென்று கொண்டிருந்தார்கள். மீமிசல் உப்பூர் மார்க்கமாக சிவிகை செல்கிறது.

திடீரென்று ''பல்லக்கை நிறுத்துங்கள், பல்லக்கை நிறுத்துங்கள்'' என்ற ஓலம் எழுகிறது. வயதான ஒரு கிழவி இவ்வாறு உரக்கச் சத்தமிடுகிறாள்.

அடுத்த கிராமத்தில் அன்று முகாமிட்டாக வேண்டும். அந்தக் கிராமம் இன்னும் ஒரு மைல் தொலைவுக்குள் இருந்தது.

எனவே பெரியவாள் நடுவழியில் பல்லக்கை நிறுத்த வேண்டாம் எனக் கருதி, உடன் வருபவர்களிடம், ''அந்தக் கிழவியைப் பக்கத்துக் கிராமத்துக்கு வந்து நிம்மதியாக நிதானமாகத் தரிசனம் செய்துகொள்ளச் சொல்லுங்கள்'' என்று பணிக்கிறார்.

மேனா மேலும் விரைகிறது.

பெரியவாளின் உத்தரவைப் பெற்றவர்கள் கிழவியிடம் தெரிவித்த பின்னரும் அவள் மேனாவின் பின் தலைதெறிக்க ஓடிவருகிறாள்.

''இல்லை, நான் அடுத்த கிராமத்துக்கு வருவதற்கில்லை. இதோ இனிமேலே போனால் என் தலை போய்விடும். பல்லக்கை நிறுத்துங்கள்'' என்று கூச்சல் போடுகிறாள்.

பெரியவாள் அப்படியே உருகிவிடுகிறார். விறுவிறுவென்று போய்க் கொண்டிருக்கும் சிவிகையை நிறுத்துமாறு ஆக்ஞையிடுகிறார்.

சிவிகை நிறுத்தப்படுகிறது.

ஆனாலும் அந்தக் கிழவி சிவிகையின் அருகே வராமல், எட்டத்திலேயே நிற்கிறாள்.

தயை மிகுந்த பெரியவாள் தாமே அவளிருக்குமிடத்துக்குப் போகிறார்கள்.

அவள் கண்ணீரும் கம்பலையுமாகப் பெரியவாளிடம், ''இந்த எல்லைக்கு மேல் வந்தால் என் தலை போய்விடும். அதனால்தான் தங்களைச் சிரமப்படுத்தும்படி ஆகிவிட்டது'' என்று கூறி அழுகிறாள்.

ஸ்ரீவைகுண்டத்துப் பெண்களில் சிலருக்கு இருந்த கட்டுப்பாட்டைப் பற்றி முன்பே சொன்னோமல்லவா? அவர்களில் இரண்டொரு குடும்பத்தினர் ஏதோ காரணமாகச் சுமார் மூந்நூறு, நானூறு வருஷங்களுக்கு முன் கோட்டையிலிருந்து இரகசியமாக வெளியே வந்தனர். பிறகு அவர்கள் அந்த ஊருக்குச் செல்வதற்கில்லை. ஏனெனில் எல்லை மீறியதற்காகக் கொலைத் தண்டனை தரப்படும்! அந்தக் குடும்பத்தின் வம்சாவளியினர் உப்பூர் பக்கத்தில் ஐந்தாறு கிராமங்களில் இப்போது இருக்கிறார்கள். ஸ்ரீவைகுண்டத்தில் இருந்த கட்டுப்பாட்டை இந்தக் கிராமங்களிலும் அவர்கள் கடைப்பிடிக்கிறார்களாம்! அதாவது அந்தந்தக் கிராம எல்லையை அவர்களது பெண்டிர் கடந்து செல்வதில்லை. மீறினால் சிரசாக்கினைதான்!



''அழாதே அம்மா! அழாதே!'' என்று பெரியவாள் மிகுந்த பரிவுடன் அவளுக்கு ஆறுதல் கூறினார்கள். ''நீ செய்ததில் தோஷமே இல்லை'' என்று சமாதானம் சொன்னார்கள். அன்பு மயமாகத் தரிசனம் கொடுத்தார்கள்.

''தரிசனம் பண்ணிவிட்டாயா? என்னிடம் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லிவிட்டாயா? நான் போகலாமா?'' என்று அவளிடம் கேட்டார்கள். அந்தக் கிழவி சம்மதம் தெரிவித்த பிறகே அங்கிருந்து யாத்திரையைத் தொடர்ந்தார்கள்.

எதிலுமே பற்றாமல்—ஆனாலும் தம்மிடம் பற்று வைத்த அனைவரிடமும் உருகும்— பெரியவாள் மீண்டும் சிவிகையில் சென்றதையும், எளியவளான தனக்காக யாத்திரையை இடைமறித்துத் திரும்பி வந்த ஜகத்குருவின் கருணையை வியந்தபடி அந்தக் கிழவி சிவிகையையே பார்த்தபடி நின்றதையும் மனக் கண்ணில் கண்டு நெகிழ்வோம்!

போகுமிடமெல்லாம்
பொங்கிடும் அழகு
பொலிந்திட அணிவீர்...

# மபத்லால் சேலைகள்

மபத்லால் சேலைகள், சீராடும் பேரணி;
சிந்தை குளிர்ந்திடும் பிரிண்ட்கள்;
விந்தை மிகுந்திடும் வண்ணங்கள்;
உன்னதமான காட்டன், 100%
போலியஸ்டர் மற்றும் கலவைத்
திருசுகள்!



AIYARS-M-151 TM

# கூற்று வந்தபோதும் குறளை மறக்கவில்லை!

"கவிதை இவ்வளவு அழகாக எழுது கிறீர்களே, நீங்கள் யாரிடம் தமிழ் பயின் றீர்கள் ?"

" எல்லாம் வல்ல அந்த ஞானப் பண்டிதன் தமிழ்க் கடவுளிடம்தான் !"

"முருகனிடமா ?"

"ஆமாம். அவன்தான் எனக்குத் தமிழாசிரி யன். அவன் அருளாலேதான் நான் கவிதை எழுதி வருகிறேன்; மேடையிலே பேசி வரு கிறேன்" என்கிறார் ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம் பெருமிதத்தோடு.

முருகனிடம் ஆறாத அன்பு வைத்திருக்கும் அவருக்கும், ஒரு மகானுக்கும் கடவுள் பற்றிய வாக்குவாதம் வந்தது. அது பற்றி ஸ்ரீமதி சௌந்தரம் அவர்களே கூறக் கேட் போம் :

1957ஆம் ஆண்டு.

சேலம் மாவட்டத்தில் வடகுமரை திரு அப்பண்ண சுவாமிகள் என்ற ஒரு மகான் இருந்தார். அவர் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவது வழக் கம். அவரிடம் நான் வேடிக்கை யாக, "ஐயா, நீங்கள் கடவுள் கடவுள் என்கிறீர்களே, கடவுள் இல்லையென்று நாத்திகர்களோ அந்தக் காலத்திலிருந்தேசொல்லி வருகிறார்களே, அந்தக் கடவுளே ஒரு நாள் வந்து, இப்படி எல் லாம் பேசும் மக்களுக்குத் தரி சனம் கொடுத்தால் அவர்கள் சந்தேகம் தீருமல்லவா ?" என்றேன்.

அதற்கு அவர், "கடவுளே நேரில் வருவாரானால் அவருக்கு மதிப்பு இருக்காதே! அதனால் தான் அவர் மறைந்து கொண்டு நாம் செய்யும் வேடிக்கைகளை யெல்லாம் பார்த்துக் கொண் டிருக்கிறார்!" என்றார், சிரித்துக் கொண்டே.








இப்படிப் பேசி முடித்த பிறகு எனக்கு இதைக் கவிதையாக எழுத வேண்டும்போல் இருந்தது. அதை எழுதி முடித்தான பிறகுதான் எனக்குள் அமைதியும் திருப்தியும் ஏற்பட்டன. அந்தக் கவிதையின் ஒரு பகுதி இதோ :

"உலகத்து மாந்தரெல்லாம் உன்னை இங்கே
உண்டென்றும் இல்லையென்றும் உரக்கப் பேசிக்
கலகத்தில் வாழ்நாளைக் கழிக்கின்றார்கள்
கடவுளிங்கே பலவென்று கண்டவர் போல்
பலகற்றும் சொல்லுபவர் வாழுகின்றார்!
பார்த்தபடி இருக்கின்றாய் பதற்றமின்றி;
நிலவுலகில் கண்ணெதிரே தோன்றி உண்மை
நிலையுரைத்தால் உன்வாழ்வும் உதிர்ந்தா போகும்?"

தமிழறிஞர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் நோய்வாய்ப்பட்டுப் பொது மருத் துவ மனையில் இருந்தார். அவர் என்னிடம் மிக்க அன்பு செலுத்தியவர்; நான் மேடை யில் பேசும்போது அவர் என்னை அளவுக்கு மீறிப் புகழ்ந்து, என் பேச்சாற்றலை வளர்த் தவர். அவரைப் பார்க்கப் போயிருந்தேன்.

அவர் பக்கத்தில் அன்பே உருவான அவர் மனைவி சோகக் கடலில் மூழ்கிக் கிடந்தார். மாலை மாலையாக வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொள்வதும், தம் கணவர் முகத் தைப் பார்ப்பதுமாக இருந்தார்.

என்னைப் பார்த்தார் ரா. பி. சே. "சௌந் தரம்... எங்கே வள்ளுவர் சொன்ன குறள் யாது? இடுக்கண் வருங்கால்...." என்று அவர் சொல்ல, நான், "நகுக" என்றேன். பிள்ளை அவர்கள் பிள்ளை போல் சிரித்து விட்டார். உடனே அவர் தம் மனைவியைச் சுட்டிக்காட்டி, "கண்ணீரும் கம்பலையுமாக இருக்கிறாளே, இவளுக்கு இந்தக் குறளின் பெருமையை விளக்கி ஆறுதல் சொல் லேன்....." என்றார்.

இந்தச் சம்பவம் என் மனத்தில் ஆழப் பதிந்துவிட்டது. நோய்வாய்ப்பட்டுத் துன் புறுகிற நிலையிலும் தமிழை அவர் மறக்க வில்லையே !

பிள்ளையவர் மனைவியழும் குரலின் ஊடே
பேசுகின்ற பேச்சொலியைக் கேட்டேன் "எங்கே,
வள்ளுவர் சொன்ன குறள் யா(து) இடுக்கண்
வருங்கால்" என் றவர்சொல்ல "நகுக" என்றேன்.
பிள்ளையைப்போல் அவர்சிரித்தார் மனைவிக்கந்தப்
பெருமையுறும் குறள்விளக்கிச் சொல்லச்சொன்னார்
கொள்ளையிடக் கூற்றுவந்து குதித்தபோதும்
குறள்தரும் தமிழையவர் மறக்கவில்லை !

ஸ்ரீமதி சௌந்தரம் 'கைலாசம்' சேதுப் பிள்ளை அவர்களின் மறைவால் பேரதிர்ச்சிக் குள்ளானார். அவரது கண்ணீர் ஒரு பாடலை வார்த்தது.

தன்பிள்ளை பெருமையினை நாடுமுற்றும்
சாற்றுவதைக் கேட்ட தமிழ்த் தாய்துடிக்க,
அன்பில்லை அன்பில்லை காலனுக் கென்(று)
அருந்தமிழர் அலறிக் கண் ணீர்வடிக்க
"என்சொல்லைக் கேளுங்கள், தமிழே இன்பம்"
எனச்சொல்லி வானகமே சென்றுவிட்டார்.
தன்சொல்லை - தன்நினைவைத் தமிழர் நெஞ்சில்
தவழவிட்டுச் சென்றுவிட்டார் சேதுப்பிள்ளை!

பேட்டி : **பி.வி.கிரி**

# ராமாயணம் ராஜாஜி

இந்திரஜித்தை வீழ்த்திவிட்டு லக்ஷ்மணன் ராமன் இருந்த இடம் சென்றான். உடம்பெல்லாம் காயம் பட்டு ரத்தம் பெருகிய நிலையில் லக்ஷ்மணன் மெள்ள ஜாம்பவான் ஹனுமான் இவர்களின் பேரில் சாய்ந்து நடந்தான். இந்திரஜித்தின் வதத்தை அறிந்த ராமன் தம்பியை ஆலிங்கனம் செய்து, ''லக்ஷ்மணா! இனி ராக்ஷஸ குலம் மடிந்தது'' என்று சொல்லி மகிழ்ச்சிப் பரவசப்பட்டான். அடக்கத்துடன் ஒதுங்கி நின்ற லக்ஷ்மணனை ராமசந்திரன் தன் மடியின் மேல் உட்கார வைத்து உச்சி மோந்து, தன் ஆனந்தத்துக்குப் போக்கு விட்டுப் பேசலானான்: ''ஒருவராலும் செய்ய முடியாத வீரச் செயலைச் செய்து தீர்த்தாய். ராவணனுடைய வலது கை உன்னால் இன்று வெட்டப்பட்டது. விபீஷணனுக்கும் அனுமானுக்கும் உனக்கும் சமானம் யார்? இனி எனக்கு ஒரு கவலையுமில்லை. இந்திரனை ஜெயித்த வீரனை நீ ஜெயித்து வதம் செய்துவிட்டாய். சீதையை அடைந்து விட்டேன் என்றே எண்ணுகிறேன்'' என்றான்.

இந்திரஜித்து லக்ஷ்மணனால் வதம் செய்யப்பட்டான் என்ற செய்தி ராவணனுக்கு எட்டியது. ''உன் மகனை விபீஷணனுடைய சகாயத்தைக் கொண்டு லக்ஷ்மணன் கொன்றான்'' என்று சொல்லக் கேட்டதும் அவன் துக்கமும் கோபமும் சமுத்திரம் போல் பொங்கி, எரியும் சுடர் எண்ணெய்த் துளிகள்போல் கண்ணீர் விட்டான். அரக்க அரசனுடைய வாயினின்று புகையும் நெருப்புமாக மூச்சு வெளி வந்தது.

''ஐயோ! என் அருமைக் குழந்தாய்! ஒப்பற்ற வீரனே! மகேந்திரனை வென்ற சூரனே! யமன் வெற்றியடைந்து விட்டானா? நீ வீர சுவர்க்கம் அடைந்து விட்டாய். நான் துக்கப்படலாகாது'' என்றான்.

''இந்திரஜித்து மாண்டானா? உலகம் எனக்குச் சூனியமாகிப் போய்விட்டது'' என்றான் மறுபடியும்.

''மண்டோதரியையும் உன் பிரிய மனைவியையும், என்னையும் விட்டுப் போய்விட்டாயே! உன் பிரதிக்ஞையை நிறைவேற்றாமலும், பழி தீர்க்காமலும் எங்களை விட்டுப் போய் விட்டாயே!'' என்று கதறினான்.

'' இந்த விபத்துக்களுக்கெல்லாம் காரணமான ஜானகியைக் கொன்று விடுவதே நலம். என் குமாரன் மாயை செய்து சீதையைக் கொன்றதாகக் காட்டினான். இன்று உண்மைச் சீதையையே நான் வெட்டிக் கொல்லப் போகிறேன்'' என்று கத்தி எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

சில மூர்க்க அரக்கர்கள் ராவணன் கோபமாகப் புறப்பட்டதைக் கண்டு சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். ஆனால் சுபார்சவன் என்ற மந்திரி ராவணனைத் தடுத்தான்.

''மகாராஜனே! என்ன செய்யத் துணிந்தீர்! என்ன காரியம் செய்யப் போகிறீர்! தசக்ரீவா! குபேரனுடைய தம்பியாகிய நீர் ஒரு பெண்ணைக் கொன்று, அந்த அவமானத்தையும் தோஷத்தையுமா சம்பாதிக்கப் போகிறீர்? கோபத்தை இவ்விதத்திலா போக்கி விடுவது? வேதங்களை ஓதிச் சகல வித்தையும் கற்று விரதம் அனுசரித்த நீர் இப்படிச் செய்யலாகாது. உமக்கு நிகர் யார்? யுத்தத்தில் உம்மை எதிர்ப்பவர் யார்? யுத்தத்தில் வென்று சீதையைக் கிரமமாக அடைவீர். சந்தேகம் இல்லை. ராமன் பேரில் கோபத்தைச் செலுத்துவோம். இன்று சதுர்த்தசி. இரவு கழிந்தால் நாளை அமாவாசை. எல்லாப் பலத்தையும் கொண்டு லங்கையிலிருந்து புறப்பட்டு ராம லக்ஷ்மணர்களை வதம் செய்து வெற்றி பெறுவீர். பிறகு சீதையை அடைவீர். பிரம்மாவிடமிருந்து பெற்றிருக்கும் கவசத்தைத் தரித்து ரதம் ஏறிக் கிளம்புவீராக!'' என்றான்.

சுபார்சவன் சொன்னதே ஹிதமென்று ராவணனும் ஒப்புக் கொண்டான்.

சிம்மாசனத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு கொஞ்ச நேரம் பேசாமல் சிந்தனையில் ஆழ்ந்தவண்ணமாக இருந்தான். பிறகு சேனைத் தலைவர்களுக்குக் கைகூப்பி, ''நீங்கள் சகல பலத்துடனும் உடனே சென்று இந்த ராமனை வதம் செய்யுங்கள். உங்களால் முடியாவிட்டால் நானே சென்று அவனை வதம் செய்வேன்'' என்றான்.

மலைகளைப் போன்ற ரதங்களிலும், யானைகளிலும், குதிரைகளிலும் ஏறி ராக்ஷச சேனை முழு பலத்துடன் யுத்தத்துக்குப் புறப்பட்டது.

வானரர்கள் கற்பாறைகளையும் மரங்களையும் பிடுங்கி எடுத்து ராக்ஷசர்களைப் பலமாகத் தாக்கினார்கள். ராக்ஷசர்

களும் வானரப் படையைப் பலமாகத் தாக்கினார்கள். ரத்த வெள்ளம் ஆறாகப் பெருகிற்று. வானரர்கள் தாவித் தாவி அரக்கர்களையும், அவர்கள் ரதங்களையும் வாகனங்களையும் ஆயுதங்களையும் ஒடித்தும் அறுத்தும் கிழித்தும் துவம்சம் செய்தார்கள். ஒவ்வொரு ராக்ஷசனையும் அநேக வானரர்கள் சூழ்ந்து கொண்டு கொன்றார்கள்.

ராக்ஷசர்களும் வானரர்களைச் சும்மா விடவில்லை. பலமாகத் தாக்கிப் பதினாயிரக் கணக்கில் கொன்றார்கள்.

* * *

ராமன் தன் வில்லை வளைத்து அரக்கர்கள் பேரில் சரமாரி பொழிந்தான். நெருப்பைப் போல் ராக்ஷஸ சேனையை அவன் பாணங்கள் எரித்தன. தங்களுடைய சகாக்கள் விழுந்து மடிவதைத்தான் கண்டார்கள். அம்பு மழையில் ராமனை அவர்கள் காணவில்லை. அநேக ராமன்களைக் கண்டார்கள். எங்கும் அவனைக் கண்டார்கள். எண்ணற்ற ராக்ஷசர்கள் மாண்டார்கள். எண்ணற்ற யானைகளும் மடிந்தன. ரதங்கள் ஒடிந்தன. அரக்கர் சேனை அழிந்தது. எஞ்சினவர்கள் சிதறி ஓடினார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் சித்தர்களும் ராமனைக் கொண்டாடினார்கள். லங்கையில் ராக்ஷஸ ஸ்திரீகள் ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டு



பெரும் கூக்குரலிட்டுப் பிரலாபித்தார்கள். ராவணனுடைய அறிவீனத்தால் இப்படி ஆயிற்றே என்று அழுதார்கள்.

## 91. ராவணன் முடிந்தான்

லங்கையில் ஒவ்வொரு வீட்டிலும் பெண்களுடைய அழுகுரல்.

ராவணனுடைய துக்கமும் வெட்கமும், கோபமும் கொந்தளித்துக் கடல் போல் பொங்கிற்று. இனி, தானே தன் மூல பலத்துடன் யுத்தம் செய்து இந்தச் சத்துருவை அழிக்க வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டு புறப்பட்டான். தன் பலத்தைப் பற்றியும் சௌரியத்தைப் பற்றியும் தான் அடைந்த வரங்களின் சக்தியைப் பற்றியும் அவனுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. ஆனபடியால் வெகு தைரியமாகவே சென்றான்.

எட்டுக் குதிரைகள் பூட்டி, எல்லா வித ஆயுதங்களும் நிறைந்த திவ்விய மான தன் தேரில் ஏறினான்.

ரதம் பூமி அதிரச் சென்றது. அரக்க வீரர்கள் பலர் தத்தம் தேர்களில் ஏறி அவனைச் சூழ்ந்து சென்றார்கள்.

லங்கையிலிருந்து ராவணன் புறப்பட்டதும் பட்சிகள் கோரமாகக் கூவின. சூரியனுடைய ஒளி மங்கிற்று. இன்னும் பல கெட்ட சகுனங்கள் காணப்பட்டன. ராவணன் இவற்றைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் வடக்குக் கோட்டை வாயில் வழியாக யுத்த களத்துக்குச் சென்றான். விருபாக்ஷன், மகோதரன், மகாபார்ச்வன் என்ற அரக்க வீரர்கள் ராவணனைத் தொடர்ந்து தங்கள் ரதங்களில் சென்றார்கள்.

ராவணனைத் தொடர்ந்து சென்ற வீரர்கள் சுக்ரீவனாலும் அங்கதனாலும் வீழ்த்தப்பட்டு உயிர் நீத்தார்கள். லக்ஷ்மணன் லங்கேசனை எதிர்த்தான். லக்ஷ்மணனுடைய தாக்குதலை ராக்ஷச ராஜன் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. லக்ஷ்மணனுடைய அம்புகளைத் தன் பாணங்களால் எளிதாக அகற்றி விட்டு, ராவணன் ராமனை நோக்கி நேராகச் சென்று தாக்கினான். பலமான பாணங்களைச் செலுத்தினான். அவற்றை ராமன் தன் பாணங்களால் தடுத்து விட்டதைக் கண்டு, இன்னும் அதிக சக்தி பொருந்திய பாணங்களைப் பிரயோகம் செய்தான். அதிலும் பயன் அடையவில்லை. யுத்தம் மிகக் கடுமையாக வெகு நேரம் நடந்தது.

ராவணனுடைய நாராசங்கள் ராமனுடைய நெற்றியில் பட்டும் அவை அவனை ஒன்றும் சேதப்படுத்தவில்லை. ராமனுடைய கோதண்டத்திலிருந்து பாய்ந்த சரங்களும் ராவணனுடைய கவசத்தைப் பிளக்கவில்லை. ராமனுடைய அஸ்திரங்களை ராவணனும் தன் பாணங்களால் தடுத்துத் தள்ளினான்.

இவ்வாறு ராவணனுக்கும் ரகுவீரனுக்கும் அற்புத யுத்தம் நடந்தது. இரு பக்கத்திலும் விடப்பட்ட அஸ்திரங்கள் மந்திர சக்தி பொருந்தியவை. அவற்றின் பிரமிக்கத்தக்க செய்கைகள் அது வரையில் யாரும் கண்டதில்லை. ராவணனுடைய அஸ்திரங்களின் வேலையைக் கண்டு ராமன் மிக வியந்தான். இருவரும் ஒன்றுக்கு மேல் ஒன்றாக மிகச் சக்தி வாய்ந்த அஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். அஸ்திரங்களின் ஜ்வாலைகளினால் ஆகாயமெல்லாம் பல சூரியன்கள் சேர்ந்தாற் போல் பிரகாசித்த மாதிரி ஜோதி உண்டாயிற்று.

ராவணனுடைய சகல அங்கங்களையும் பாணங்களால் ராமன் துளைத்தான். ஆயினும் யுத்தம் முடிவு பெறவில்லை.

பிறகு லக்ஷ்மணனும் விபீஷணனும் ராவணனைத் தாக்கினார்கள். ராவணன் தன் தம்பியைக் கொல்ல மிகக் கோபத்துடன் ஒரு சக்தி ஆயுதத்தை வீசியெறிந்தான். அது விபீஷணன் மீது விழுவதை லக்ஷ்மணன் ஒரு பாணத்தால் தடுத்து விட்டான். அது துண்டிக்கப்பட்டு எரியும் கொள்ளிக்கட்டையைப் போல் பூமியில் விழுந்தது. மறுபடியும் ஒரு சக்தி ஆயுதத்தை, 'இதோ செத்தாய்' என்று வீசினான். அந்தச் சக்தியின் தாக்குதலினால் லக்ஷ்மணன் பூமியில் பிரக்ஞையிழந்து விழுந்தான். ஆனால் உயிர் போகவில்லை.

இதைக் கவனிக்காமல் ராமன், ராவணனை மிகப் பலமாகத் தாக்கிக் கொண்டேயிருந்தான். அவ்விருவருக்கும் யுத்தம் நடந்து கொண்டிருக்கும் போது வானர வீரர்கள் யோசித்து லக்ஷ்மணனுடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக ஆஞ்சநேயனை ஓஷதி மலைக்கு அனுப்பினார்கள். ஹனுமான் இரண்டாம் தடவை வடக்கே ஆகாயத்தில் தாவிச் சென்று ஓஷதிகளைத் தேட அவகாசமில்லை! என்று மலையையே தூக்கிக் கொண்டு திரும்பி வந்தான். ஓஷதிகளைப் பிரயோகம் செய்த பிறகு லக்ஷ்மணன் சொஸ்தப்பட்டு எழுந்து யுத்தத்தில் மறுபடியும் கலந்து கொண்டான். (தொடரும்)

# ஆயிரத்தைக் கண்டவர்



ஒரு நாள் மவுண்ட்ரோடிலுள்ள 'ஹிக்கின்பாதம்ஸ்' புத்தக சாலைக்குள் நுழைந்து 'ஓரிஜினல் மாஜிக்' என்னும் புத்தகத்தை ஒரு ரூபாய் பதினான்கணா கொடுத்து வாங்கினான் பாக்கியநாத். தினமும் பள்ளிக்குப் புறப்படும்போது தாய், நான்கணா செலவுக்குத் தருவாள். அதில் இரண்டணா செலவழித்துவிட்டு மீதம் பிடித்து வைத்து அதிலிருந்து வாங்கிய அந்தப் புத்தகம்தான் பாக்கியநாத்தின் குரு!

''பொதுமக்கள் முன்பு உங்கள் மாஜிக் செய்யும் திறமையை முதன் முதலாக எந்த இடத்தில் வெளிப்படுத்தினீர்கள்?''

''சென்னை மூர்மார்க்கெட் அருகில் உள்ள திறந்தவெளி மைதானத்தில்! அப்போது வயது பதின்மூன்று. என்னுடன் படித்த மாணவன் ஒருவன் சவால் விட்டான். 'பொது மக்கள் முன்பு உன் மாஜிக்கை நடத்தி, அவர்களை நம்ப வைப்பாயா? ஐந்து ரூபாய் பந்தயம்!' என்றான். ஏற்றுக் கொண்டேன்! தந்தை அணியும் கறுப்புக் கோட்டையே நானும் அணிந்தேன்! மூர்மார்க்கெட் மைதானத்தில் திரளான கூட்டத்தின் முன்பு செய்து காட்டினேன். பொதுஜனங்கள் சந்தோஷத்தினால் காசுகளைக் கொடுத்தார்கள். இரண்டு ரூபாய் சேர்ந்தது. பந்தயத்தில் வென்றதால் நண்பனிடமிருந்து ஐந்துரூபாய் கிடைத்தது!''

பாக்கியநாத் வாழ்க்கையில் ஒரு பெரிய திருப்பத்தை இந்த நிகழ்ச்சி உண்டாக்கி விட்டது.

கல்லூரியில் படிக்கையிலேயே முந்நூறுக்குமேல் நிகழ்ச்சிகளைச் செய்து, அதன் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொண்டே படிப்பைத் தொடர்ந்தார். அட்டெண்டராக மாதம் பதினைந்து ரூபாய் சம்பளம் வாங்கியிருக்கிறார். குமாஸ்தா வேலை, பம்பாய் பிரீ பிரஸ் ஜர்னலில் உதவி ஆசிரியர் உத்தியோகம், பச்சையப்பன் கல்லூரியில் டியூடர் பதவி, பின்னர் ஈரோடு இந்து மகாஜன கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியர் பதவி ஆகியவற்றையும் வகித்திருக்கிறார்.

காந்தியடிகளின் 1942 ஆகஸ்டுப் புரட்சியில் தீவிரமாகப் பங்கு கொண்டு ஒன்றரை ஆண்டுகள் சிறைவாசம் புரிந்திருக்கிறார். இந்திய அமைச்சரவையில் சட்ட மந்திரியாக இருந்து காலமான கோவிந்த மேனன், மற்றும் இன்றைய



கேரள முதல்வர் அச்சுத மேனன் ஆகியோர் — பாக்கியநாத்தின் சிறைச்சாலை நண்பர்கள்!

ஈரோட்டில் பேராசிரியராகப் பணி புரிந்து கொண்டிருக்கையில் முழு நேர மந்திர ஜால மாயா ஜால நிகழ்ச்சிகளைச் செய்யும் பொருட்டுப் பேராசிரியர் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார்! ஆனால் எதிர்பார்த்தபடி நிகழ்ச்சிகளைச் செய்ய யாரும் அழைக்கவில்லை.

''நம்பிக்கை இழந்து மீண்டும் பேராசிரியர் வேலைக்குப் போவோமா என்று எண்ணி விட்டேன். சென்னை ரசிக ரஞ்சனி சபாவைச் சேர்ந்த திரு நடேசன் தைரியமூட்டி ஆர். ஆர். சபாவில் நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தார். எதிர்பாராதபடி நல்ல திருப்பம் ஏற்பட்டது'' என்கிறார்.

இதுவரையில் ஆயிரத்து ஐந்நூறுக்கு மேல் நிகழ்ச்சிகளைச் செய்து, மக்களை மகிழ்வித்துள்ளார். தொழிற்சாலைக்கு முதலீடு செய்வதுபோல, ஒரு லட்சத்து இருபத்து நான்காயிரம் ரூபாய் தளவாடங்கள் வைத்துள்ளார்! தச்சுப் பட்டறையும் 1500 புத்தகங்கள் கொண்ட நூலகமும் இவர் வீட்டில் உண்டு.

''ஒரு முறை—விஞ்ஞான மேதையாக விளங்கிய சி. வி. ராமன், என் திருச்சூர் நிகழ்ச்சிக்கு வந்து பாராட்டினார். சென்ற ஆண்டு காஞ்சிபுரத்தில் நடந்த 'சதஸ்'ஸில் என் மாஜிக்கைக் கண்டு மகிழ்ந்த காமகோடி புதுப் பெரியவர்கள் பொன்னாடை அளித்து ஆசி கூறினார். இவை இரண்டையும் வாழ்வில் எனது பாக்கியமாகக் கருதுகிறேன்!'' எனக் கூறியபோது, பாக்கியநாத்தின் முகத்தில் தனியான பெருமிதம் நிலவியது. இந்தியாவில் எம். ஏ. பட்டம் பெற்ற மாஜிக் நிபுணர் இவர் ஒருவரே! பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**

## பாக்கியம் செய்த பாக்கியநாத்

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 38

## நடித்தது நாடகமா?

**வா**ள் நவறித் தரையில்விழுந்த போது எழுந்த ஒலியுடன் நந்தினியின் சோகம் ததும்பிய மெல்லிய சிரிப்பின் ஒலியும் கலந்தது.

அவள் பரபரப்புடன், ''ஐயா! தெய்வத்தின் சித்தம் வேறு விதமாயிருக்கிறது. வாள் இங்கேயே கிடக்கட்டும். தாங்கள் உடனே போய் மறைந்துகொள்ளுங்கள்!'' என்றாள்.

அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வந்தியத் தேவன் குனிந்து வாளை எடுக்கப் போனான். அதன் கூரிய நுனிப் பகுதியைப் பிடித்துத் தூக்க முயன்றான்.

அதே சமயத்தில் அந்த வாளின் பிடியை ஒரு காலினால் மிதித்துக்கொண்டாள் நந்தினி.

''வேண்டாம்! இளவரசர் காதில் வாள் விழுந்த சத்தம் கேட்டிருக்கும். இங்கே வாள் இல்லாவிட்டால் அவர் மனத்தில் சந்தேகம் உண்டாகும். ஏற்

அமரர் கல்கி

கெனவே, தங்கள் மீது அவருக்குச் சந்தேகம். போய்விடுங்கள்! முன்னொரு தடவை மாயமாய் இங்கிருந்து மறைந்ததுபோல இந்தத் தடவையும் மறைந்து போய் விடுங்கள்!'' என்றாள்.

வந்தியத் தேவன் வாளின் முனையைப் பிடித்து எடுக்க முயன்றதில் அவன் கையில் சிறு காயம் உண்டாயிற்று. அவன் வாளை விட்டுவிட்டு நிமிர்ந்தான். அவன் உள்ளங்கையில் இலேசாக இரத்தம் கசிந்ததை நந்தினி பார்த்தாள்.

''நான் உமக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவேன். என் கையால் என் உடன்பிறந்தானைக் கொல்லமாட்டேன். நீர் தப்பித்துக் கொள்ளும். உம்மை இங்கே அவர் கண்டுவிட்டால்...!''

''போய்விடுங்கள்! உடனே போய் விடுங்கள்!'' என்று மணிமேகலையும் சேர்ந்து கெஞ்சினாள்.

காலடிச் சத்தம் மேலும் நெருங்கிக் கேட்டது.

வந்தியத் தேவன் வேண்டா வெறுப்பாக யாழ்க் கருவிகளின் களஞ்சியத்தை நோக்கி விரைந்து சென்றான். களஞ்சியத்தின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்று மறைந்தான்.

காலடிச் சத்தம் வெகு சமீபத்தில், வாசற்படிக்கருகில் கேட்டது.

வந்தியத் தேவன்மறைந்த இடத்தை வியப்புடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த மணிமேகலையைப் பார்த்து. ''தங்காய்! நீயும் மறைந்து கொள், கட்டிலின் திரைகளுக்குப் பின்னால் மறைந்துகொள். நாங்கள் பேசிக்கொண்டிருக்கும் போது அவருக்குத் தெரியாமல் இங்கிருந்து போய்விடு!'' என்றாள் நந்தினி.

மணிமேகலை கட்டிலின் திரைச் சீலைக்குப் பின்னால் மறைந்த மறு கணத்தில் ஆதித்த கரிகாலனும் கந்தமாறனும் உள்ளே வந்தார்கள்.

கரிகாலன் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே நந்தினியை நெருங்கினான். கட்டிலின் திரைச் சீலை அசைந்ததை



அவன் கவனித்தான். ஆனால், கவனித்த தாகக் காட்டிக் கொள்ளவில்லை.

நந்தினிக்கு அருகில் வந்ததும் தரையிலே கிடந்து ஒளிவிட்டுக்கொண்டிருந்த வாளைப் பார்த்தான். பின்னர், நந்தினியின் முகத்தை உற்றுப் பார்த்தான்.

நந்தினியின் நெஞ்சை ஊடுருவிய அந்தப் பார்வையின் தீட்சண்யத்தைப் பொறுக்க மாட்டாமல் வாளை எடுக்கும் பாவனையாக அவள் குனிந்தாள்.

நந்தினியின் நோக்கத்தை அறிந்து அவளை முந்திக் கொண்டு கரிகாலன் வாளைக் கையில் எடுத்துக் கொண்டான். அதன் அடிப் பிடியிலிருந்து கூரிய நுனி வரையில் கூர்ந்து பார்த்தான். நுனியில் புதிய இரத்தக் கறை இருப்பதையும் பார்த்துக் கொண்டான்.

பின்னர் நந்தினியை நோக்கி, "தேவி! நாங்கள் வரும்போது கேட்ட சத்தம் இந்த வாளின் சத்தந்தான் போலிருக்கிறது. தங்கள் கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்திருக்கிறது. எங்களை வரவேற்பதற்குக் கையில் வாளேந்தி ஆயத்தமானது போலத் தோன்றுகிறது" என்றான்.

"வீரம் மிக்க இளம் புலிகளையும் தீரத்தில் சிறந்த வாலிபச் சிங்கங்களையும் வரவேற்பதற்குரிய முறை அதுவேயல்லவா?" என்றாள் நந்தினி.

"மூர்க்கப் புலிகளுக்கும் சிங்கங்களுக்கும் கூரிய நகங்களும் பற்களும் வேண்டும். ஆனால் துள்ளித் திரியும் புள்ளி மானுக்கு அவை தேவையில்லையென்று தானே கடவுள் கரவில்லை?" என்றான் ஆதித்த கரிகாலன்.

"மானும் தன் கொம்புகளை உபயோகிக்க வேண்டிய தேவை நேரிடலாம் அல்லவா? தனக்குக் கொம்புகளை அளித்த கடவுளிடம் கலைமான் நன்றி செலுத்தும் சந்தர்ப்பமும் நேரிடலாம் அல்லவா? கருணைகூர்ந்து அந்த வாளை என்னிடம் கொடுத்து விடுங்கள்!" என்று மன்றாடினாள் நந்தினி.

"இல்லை; இல்லை! தங்கள் கைகளுக்கு இது ஏற்றதன்று. மலர் கொய்யவும் மாலை புனையவும் பிரம்ம தேவன் படைத்த தளிர்க் கரங்களினால் வாளை எப்படிப் பிடிக்க முடியும்?" என்றான் கரிகாலன்.

"கோப்பெருமகனே! இந்த ஏழையின் கைகள் ஆர்வத்துடன் மலர் கொய்து ஆசையுடன் மாலை புனைந்த காலம் உண்டு. அந்த மாலையைச் சூடுவதற்குரியவர் எப்போது வருவார் என்று காத்திருந்து காத்திருந்து ஏமாந்த காலமும் உண்டு. அவ்விதம் பகற் கனவு கண்டுவந்த காலம் போய் எத்தனையோ யுகங்கள் ஆகி விட்டன. இப்போது இந்தத் திக்கற்ற அநாதையின் கரங்கள் வாளைத் துணை கொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. ஐயா! அந்தத் துணையையும் தாங்கள் என்னிடமிருந்து பறித்துக் கொள்ளாதீர்கள்!" என்றாள் நந்தினி.

"தேவி! இது என்ன பேச்சு? தங்களையா திக்கற்ற அநாதை யென்று சொல்லிக் கொள்ளுகிறீர்கள்? தங்கள் காலால் இட்ட பணியைத் தலையால் வகித்து நிறைவேற்றுவதற்கு எத்தனை வாலிப வீரர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்? இது தங்களுக்குத் தெரியாதா?" என்றான் கரிகாலன்.

"தப்பித் தவறி என் கால் அத்தகைய தூர்த்தர்களுடைய தலையிலே பட்டுவிட்டால் அந்தக் காலை வெட்டிக்கொள்ள வேண்டியதா யிருக்கும், ஐயா! அதற்கேனும் வாள் அவசியம் அல்லவா?"

"ஐயோ! இது என்ன கர்ண கடூரமான பேச்சு? பாதச் சிலம்பு கலீர் கலீர் என்று ஒலிக்க அரண்மனை மாட கூடங்களில் அன்னமும் நாணும் நன்னடை பயில வேண்டிய கால்களை வெட்டுவதா? இந்த வார்த்தைகள் பெரிய பழுவேட்டரையரின் காதில் விழுந்தால் அவர் உள்ளம் என்ன பாடு படும்?"

"ஐயா! அவரைப் பற்றிக் கவலைப் படுவோர் யார்? அந்தக் கிழச் சிங்கம் ஒரு கர்ஜனை செய்தால் அதைக் கேட்டு நடுங்கி ஓடிப் பதுங்கிய வாலிபப் புலிகள் இப்போது எவ்வளவு தைரியமாக வெளிவந்து நடமாடுகின்றன? அவர் கொள்ளிடத்து வெள்ளத்தில் போய் விட்டார் என்ற செய்தியைக் கேட்ட பின்னர் அல்லவா வாலிபப் புலிகளுக்கு இவ்வளவு துணிச்சல் வந்துவிட்டது? அந்தப் புலிகள் என்னிடம் ரொம்பவும் நெருங்கி விடாமல் பார்த்துக் கொள்வதற்காக இந்த ஆயுதத்தை வைத்திருந்தேன். குப்பையில் கிடந்த என்னை உலகமறிய அழைத்து வந்து அரண்மனை வாழ்வும் அரச போகமும் அளித்த மகாபுருஷரின் கௌரவத்தைக் காப்பதற்காக இந்த வாளின் உதவியைக் கோரினேன். தாங்கள் சற்று முன்னால் சொன்னது போல், மலர் கொய்ய வேண்டிய கரங்களினால் வாள் சுழற்றப் பயின்றேன்..."

"தேவி! உண்மையில் அதற்காகத்தானா? இந்த வாளைத் தாங்கள் பெட்டியில் வைத்துப் பூஜை செய்து வந்ததும், இதைத் தங்கள் மலரினும் மென்மையான கன்னங்களோடு சேர்த்துக் கொஞ்சிக் குலாவி வந்ததும், பெரிய பழுவேட்டரையரின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகத்தானா? அல்லது தங்களைப்



# ஓ! மாம்பழமே!

நல்ல வெய்யில் நேரம். போஜ மன்னர் அந்த வேளையிலும் மாறு வேடம் பூண்டு புறப்பட்டார். எங்கெல்லாமோ சுற்றிவிட்டு ஓர் ஊரை ஒட்டினாற் போலிருந்த மாந்தோப்பை அடைந்தார். குளுகுளு வென்று காற்று வீசியது. வெய்யிலில் நிழலின் அருமையை உணர்ந்தவர், அந்தத் தோப்புக்குள் நுழைந்தார். நன்கு பழுத்துக் கொத்துக் கொத்தாகப் பொன்னிறம் கண்ட மாம்பழங்களைக் கண்டதும் அவருக்கு நாவில் ஜலம் ஊறிற்று. காவலாளியை அருகில் அழைத்து, "நான்கு மாம்பழங்கள் தர முடியுமா?" என்று கேட்டார்.

அவன் மகிழ்ச்சியோடு ருசியான பழங்களைப் பறித்து அவர் எதிரே கொண்டு வந்து வைத்தான். போஜ மன்னருக்கு அவற்றை இலவசமாகப் பெறுவது நியாயமாகத் தோன்றவில்லை. "இதற்கு என்ன தர வேண்டும்?" என்று கேட்டார்.

நாக்கூசாமல் "நாற்பது வராகன்" என்றான் காவலாளி.

அயர்ந்து போய் விட்டார் மன்னர். "ஏனப்பா! இப்படிக் கொள்ளை விலை சொல்கிறாய்? இந்த ஆண்டு மாம்பழங்கள் அப்படி ஒன்றும் அரிதாகி விடவில்லையே?"

"பார்த்தால் தெரியவில்லையா, மாம்பழங்கள் அரிதாகவில்லை, அபாரமாகக் காய்த்திருக்கின்றன என்று? ஆனால் போஜமன்னர் அடிக்கடி வருவாரா என்ன? அரிய தருணத்தை நழுவவிட நான் என்ன பைத்தியக்காரனா?" என்றான் காவலாளி.

"ஆளுக்குத்தகுந்த விலையா?" என்றுடன் ஹாஹ் சிரித்துக் கொண்ட மன்னர் காவலாளி கேட்ட பணத்தை எண்ணி வைத்தார்!

அந்தப் பழக்கம் — அதாவது ஆளுக்குத் தகுந்த விலை இன்றும் நீடிக்கிறது! நம்பிக்கையில்லாவிட்டால் மாம்பலத்தில் மாம்பழம் விற்கும் இடத்தைப் பாருங்கள்!

உலகத்திலேயே மாம்பழத்துக்குப் பெயர் போன நாடு இந்தியாதான்! அந்த நாட்களில் என்ன, இன்றுங்கூட.

மாம்பழத்தின் மணம் அந்த நாட்களில் ஈரான் மன்னரையும் கவர்ந்தது. தமது நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒருவரை அழைத்து, ஏராளப்பொருள் கொடுத்து மாம்பழம் வாங்கி வர இந்தியாவுக்கு அனுப்பி வைத்தார்.

இந்தியா வந்த தூதர் பல இடங்களுக்கும் சென்று நல்ல நல்ல மாம்பழங்களைச் சுவைத்தார். 'என்ன ருசி! என்ன ருசி! இந்தியாவில் கிடைக்கும் இந்தப் பழங்கள் போல் சொர்க்கத்திலுமே கிடையாது!' என்று தேர்ந்தவர், இனித்த பழங்களாகத் தேர்ந்தெடுத்து மன்னருக்கென வாங்கி வந்தார்.



வழி நெடுக மாம்பழங்கள் கனியக் கனிய நல்ல வாசனை! அப்புறம் அழுக அழுக நாற்றம்! என்ன செய்வது என்று தோன்றாதவர், மாம்பழக் கூடையை வழியிலேயே விட்டெறிந்துவிட்டு வெறுங் கையோடு ஈரானை அடைந்தார்.

மன்னர் மாம்பழத்துக்காக வழி மேல் விழி வைத்தவண்ணம் அமர்ந்திருந்தார். தூதர் வந்த செய்தி அறிந்ததும், தமது பரிவாரத்தோடு மாம்பழம் சாப்பிட அமர்ந்தார்.

ஆனால் ஏமாற்றம்! நடந்ததைக் கூறி மன்னிக்க வேண்டினார் தூதர். இருந்தாலும் விரும்பிய பொருள் கிடைக்காத ஆத்திரத்தில் மன்னர் கோபிக்கக் கூடும் என்று எண்ணி, "மாம்பழம் கொண்டுவர முடியாவிட்டாலும் மாம்பழத்தின் ருசியை உங்களுக்கு உணர்விக்க முடியும்" என்று கூறினார்.

"எப்படி?" மன்னர் கேட்டார்.

"பெரிய ஜாடி நிறையத் தேன் கொண்டு வரச் சொல்லுங்கள்!"

தூதர் சொல்லி முடிப்பதற்குள்ளாகவே தேன் ஜாடி வந்தது. தேன் ஜாடியில் தம் தாடியை நனைத்தவர், "இதைச் சுவைத்தால் மாம்பழத்தின் ருசியோடு மாம்பழம் சாப்பிடும் எண்ணமும் உண்டாகும்!" என்றார்.

ஆம், இந்தியாவில் அவருக்குத் தேருக இனித்த பழம்தான் 'தாடி பசந்த்' என்னும் நார் மாம்பழம்!

— ரா. வி.

* * *

பார்த்து அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு நெருங்கும் நிர்மூடர்களை நெருங்க வொட்டாமல் தடுப்பதற்குத் தானா? வேறு நோக்கம் ஒன்றுமில்லையா?"

"வேறு என்ன விதமான நோக்கம் இருக்க முடியும், ஐயா?"

"ஏன்? வேறு எத்தனையோ நோக்கம் இருக்க முடியும்! பழி வாங்கும் நோக்கம் இருக்கலாம். தாங்கள் அடிபணிந்து கைகூப்பிக் கேட்டுக் கொண்ட வேண்டுகோளைப் புறக்கணித்துத் தங்கள் உள்ளத்தில் அழியாத புண்ணை உண்டாக்கிய பாதகனைக் கொன்று சபதம் முடிக்கும் நோக்கம் இருக்கலாம்!"

நந்தினி தலையைக் குனிந்து கொண்டு ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள். பின்னர், இளவரசனை நிமிர்ந்து நோக்கி, "கோமகனே! அம்மாதிரி எண்ணமும் ஒரு சமயம் எனக்கு இருந்தது உண்மைதான். அதற்காகவே இந்த வீர வாளைப் பூஜை செய்து வந்தேன். எப்போது

அந்த வேளை வரும் என்று காத்துக் கொண்டிருந்தேன். ஆனால் வேளை வந்த போது என் கரங்களில் வலிவு இல்லாமல் போய் விட்டது; நெஞ்சில் உறுதி இல்லாமலும் போய் விட்டது. இனி இந்த வாளை என் கற்பையும் என் கணவரின் கௌரவத்தையும் காப்பாற்றிக் கொள்ள மட்டுமே உபயோகப்படுத்துவேன். கருணை செய்து அதை இப்படிக் கொடுங்கள்!'' என்றாள்.

''தேவி! அந்தப் பொறுப்பை நான் வகிக்கக் கூடாதா? தங்களுக்கோ, தங்கள் கணவருக்கோ, தீங்கு எண்ணிய பாதகனைத் தண்டிக்கும் கடமையை நான் நிறைவேற்றக் கூடாதா?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''தங்களால் அது இயலாத காரியம். இந்தத் திக்கற்ற அநாதை ஸ்திரீயின் நிமித்தம் தங்கள் ஆருயிர் நண்பர்களைத் தண்டிக்க முடியுமா?''

'' ஏன் முடியாது? நிச்சயமாய் முடியும்! நந்தினி! நீ அன்றைக்கு ஏரித் தீவில் வந்தியத்தேவனைப் பற்றிக் கூறியதை யெல்லாம் அப்போது நான் பூரணமாக நம்பவில்லை. பின்னால், கந்தமாறன் சொல்லியதிலிருந்து அவ்வளவும் உண்மைதான் என்று அறிந்தேன். அந்தப் பாதகனை நீ மன்னித்தாலும் நான் மன்னிக்கச் சித்தமாயில்லை. அவன் எங்கே என்று சொல்!... சொல்லமாட்டாயா?.... வேண்டாம்! என் கண்கள் குருடாகி விடவில்லை!...இதோ பார்!'' என்று ஆத்திரத்துடன் ஆதித்த கரிகாலன் கர்ஜனை செய்து கொண்டே கட்டிலை மூடியிருந்த திரைச் சீலையை நோக்கி அடி எடுத்து வைத்தான்.

நந்தினி அவன் காலைத் தொட்டு எழுந்து மண்டியிட்டுக் கரங்களைக் குவித்துக் கொண்டு, ''கோமகனே! வேண்டாம்! வேண்டாம்!'' என்றாள்.

''நந்தினி! உன் கருணையை வேறு காரியங்களுக்கு வைத்துக் கொள்! என் நண்பனைப் போல் நடித்துச் சதி செய்யும் சண்டாளனிடம் கருணை காட்ட வேண்டாம்!'' என்று சொல்லியவண்ணம் ஆதித்த கரிகாலன் நந்தினியை மீறிக் கொண்டு மேலே நடந்தான்.

நந்தினி பிரமித்துத் திகைத்தவள் போல் நாலாபுறமும் பார்த்து விழித்தாள். இத்தனை நேரமும் வாசற்படிக்கு அருகில் சிலையைப்போல் நின்று கொண்டிருந்த கந்தமாறனைப் பார்த்து, ''ஐயோ! அவரைத் தடுங்கள்!'' என்று அலறினாள்.

கந்தமாறனுடைய சிலைக்கு உயிர் வந்தது. ஆனால் அவ' 'ந்த இடத்தை விட்டு அசையவில்லை. இலேசாக ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு மீண்டும் சிலையாக மாறி விட்டான்.

கரிகாலன் ஒரு கையினால் வாளை ஓங்கியவண்ணம் கட்டில் திரைச் சீலையின் அருகில் சென்று, இன்னொரு கையினால் திரையை விலக்கினான்.

உள்ளே, கையில் சிறிய கூரிய கத்தியுடன் தோன்றிய மணிமேகலை, 'கிறீச்' என்று சத்தமிட்டாள்.

ஆதித்த கரிகாலன் ஓங்கிய வாளுடன் சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்றுவிட்டுப் பின்னர் அந்த வாளினால் கட்டில் திரைச் சீலையைக் கிழித்தெறிந்தான்.

''ஆகா! இந்தப் பெண் புலியா இங்கே நிற்கிறது? அப்பப்பா! இதன் நகங்கள் மிகக் கூர்மையாயிற்றே?'' என்று கூறி 'ஹா ஹா ஹா' வென்று சிரித்தான்.

பின்னர், கந்தமாறனைப் பார்த்து, ''நண்பா! உன் தங்கையை அழைத்துப் போய் அவள் தாயாரிடம் ஒப்புவித்து விட்டு வா! இவள் வயிற்றில் எத்தனை புலிக் குட்டிகள் பிறக்குமோ தெரியாது! இவள் இந்த வீர பாண்டியனுடைய வாளுக்கு இத்தனை நேரம் இரையாகிச் செத்திருந்தால் சோழ நாடு எத்தனை வீரப் புதல்வர் புதல்விகளை இழக்கும்படி நேர்ந்திருக்கும்?'' என்றான்.

சற்றுமுன் உண்மையிலேயே பெண் புலிபோல் சீறிய மணிமேகலை ஆதித்த கரிகாலனின் வார்த்தைகளைக் கேட்டு நாணம் அடைந்தாள். கந்தமாறன் அவளை அனுப்பி அழைப்பதற்குள், அவளாகவே அந்த அறையிலிருந்து செல்ல ஆயத்தமாகி விட்டாள்.

அண்ணனும் தங்கையும் அங்கிருந்து போனதும், கரிகாலன் நந்தினியைப் பார்த்து, ''தேவி! ஒரு நாடகம் நடித்து அவர்கள் இருவரையும் போகச் செய்து விட்டேன். இனிமேலாவது நம் உள்ளத்தைத் திறந்து உண்மையைப் பேசலாம் அல்லவா?'' என்றான்.

நந்தினி உண்மையான வியப்புடன் கரிகாலனை நோக்கி, ''ஐயா! தாங்கள் நடித்தது நாடகமா? அப்படியானால், அது ஆச்சரியமான நடிப்புத்தான்! நானும் அதை உண்மையென்றே நம்பி ஏமாந்து போனேன்!'' என்றாள்.

''நந்தினி! நடிப்பிலே உனக்கு இணை இந்த உலகிலேயே இல்லை என்பது என் எண்ணம். நீயே ஏமாந்திருந்தால், என் நடிப்புத் திறமையை அவசியம் மெச்சிக் கொள்ள வேண்டியதுதான்! ஆனாலும், நான் வாளை ஓங்கிக் கொண்டு மணிமேகலை மறைந்திருந்த இடத்தை நோக்கிப் போனபோது, நீ என்னைத் தடுக்கவில்லையே? அது ஏன்? என் மீது சுமந்

துள்ள பல குற்றங்களுடன் ஸ்திரீ ஹத்தி தோஷமும் சேரட்டும் என்று எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தாயா?'' என்று கேட்டான் கரிகாலன்.

''சிவ, சிவா! இந்த உலகத்திலேயே இன்றைக்கு அந்தப் பெண் ஒருத்தியிடந்தான் நான் உண்மையான அன்பு கொண்டிருக்கிறேன். அவளும் சாகட்டும் என்று சும்மாப் பார்த்துக் கொண்டிருப்பேனா? திரையை நீக்கியதும் தாங்களே தெரிந்து கொள்வீர்கள் என்று எண்ணினேன்....''

கரிகாலன் சிரித்தான்.

''இந்தச் சிரிப்பின் பொருள் விளங்கவில்லை!'' என்றாள் நந்தினி.

''மணிமேகலையை நான் கொல்லுவதற்கு நீ சொன்ன காரணமே போதும்'' என்றான் கரிகாலன்.

''இன்னும் விளங்கவில்லை!''

''நீ யாரிடமாவது அன்பு கொண்டாய் என்றால், அவனோ அவளோ என்னுடைய பரம விரோதியாகிவிடுவார்கள். இது உனக்குத் தெரியாதா?''

''தெரியும்; அத்தகைய துரதிர்ஷ்டசாலி நான் என்று தெரியும். ஆனாலும் தங்கள் குரோதம் கள்ளங்கபடமறியாத இந்த இளம் பெண் வரையில் செல்லும் என்று நான் கருதவில்லை!''

''அல்லது உன் நோக்கம் வேறுவிதமாகவும் இருக்கலாம். நான் மணிமேகலையைக் கொன்று விட்டால், அதற்காகக் கந்தமாறன் என்னைப் பழி வாங்குவான் என்று எண்ணியிருக்கலாம். அல்லது நான் அவளைக் கொல்லுவதற்குள் அவள் கையிலிருந்த சிறிய கத்தியை எறிந்து என்னைக் கொன்றுவிடுவாள் என்றும் கருதியிருக்கலாம்.....''

''ஐயையோ! இது என்ன? எப்படிப்பட்ட பயங்கரமான கற்பனைகள்!''

''கற்பனைகளா? என்னுடைய பயங்கரமான கற்பனைகளைக் காட்டிலும் பயங்கரமான நோக்கத்தை நீ உன் மனத்தில் வைத்திருக்கிறாய்! உண்மையைச் சொல்! என் உள்ளத்தில் கொழுந்து விட்டெரியும் தீயை மேலும் வளர்க்க வேண்டாம்! என்னை எதற்காக இந்தக் கடம்பூர் அரண்மனைக்கு வரச் சொன்னாய்? எதற்காகப் பழுவேட்டரையரைத் தஞ்சைக்குப் போகும்படி செய்தாய்? சோழ சாம்ராஜ்யத்தைப் பங்கிட்டுக் கொடுத்துச் சமரசம் செய்து வைப்பதற்காகவோ, எனக்கும் மணிமேகலைக்கும் திருமணம் செய்வித்துக் கண்டு களிப்பதற்காகவோ இத்தனை முயற்சியும் செய்ததாகச் சொல்லாதே! அந்தக் கதைகளையெல்லாம் நான் நம்ப மாட்டேன். நம்பியிருந்தால், இங்கு வந்திருக்கவும் மாட்டேன்....''

''பின் எதற்காக இங்கு வந்தீர்கள், கோமகனே! என்ன நம்பிக்கையுடன் இந்த இடத்துக்கு வந்தீர்கள்?''

''நம்பிக்கையா? எனக்கு ஒருவித நம்பிக்கையும் கிடையாது. என் உள்ளத்தில் நிரம்பியிருப்பதெல்லாம் நிராசை



## விநோத சம்பிரதாயம்

நௌகாங்கில் வாழும் அங்காமி நாகர்கள் கிராமத்தில் ஒரு பெரிய மனிதர் இறந்துவிட்டால் மூன்று நாட்களுக்குத் தங்கள் கிராமத்தை விட்டு அகலமாட்டார்கள். பெரிய விருந்து படைப்பார்கள். உடலை மயானத்தில் புதைத்துச் சமாதி கட்டுவார்கள். போர் உடை அணிந்து, பலத்த கூக்குரல் இட்டுக் குதித்தபடியே, ''எந்த ஆவி வந்து உன் உடலிலிருந்து உயிரைப் பறித்துச் சென்றது? வேல்களினால், அதனைக் கொன்று விடுவோம்!'' என்று கூறி வேல்களையும் வாள்களையும் தரையில் குத்துவார்கள். மரணமடைந்தவரின் வாள், வேல், கேடயம் முதலிய உடைமைகளை அவரோடு சமாதியில் வைத்து விடுவார்கள்.

* * *

நாக வாலிபனுக்குத் தன் மனத்துக்குகந்த பெண்ணைத் தேர்ந்தெடுக்கவும் அவளைச் சந்திக்கவும் அனுமதி உண்டு. அவன் அவளுடன் அளவளாவிக் கொண்டிருக்கும் போதே அலட்சியமாகத் தான் உபயோகப்படுத்தும் புகைக் குழாயைக் கீழே நழுவவிடுவான். அந்தப் பெண்ணுக்கு நாக இளைஞனிடம் விருப்பமிருந்தால், அந்தப் புகைக் குழாயை எடுத்துப் புகை பிடிப்பாள். இந்தச் செய்தி பெற்றோர்களுக்குப் பறக்கும். பெண்ணுக்கு ஆபரணங்களைப் பரிசாகப் பையனின் பெற்றோர் அனுப்பி வைப்பார்கள். அதோடு பசுக்கள், எருமை, அரிசி, மது ஆகியவை பெண்ணின் வீட்டுக்குப் போகும். ஒரு முதிய பூசாரிக் கிழவி மாப்பிள்ளையோடு கூட நிறைய இஞ்சி எடுத்துக் கொண்டு செல்வாள். இளைஞன் தன் வருங்கால மனைவியிடம் கூறுவான்: ''நான் இந்த நாள் உன்னை என் மனைவியாக ஏற்றுக் கொள்கிறேன். உன்னை நிராகரிக்க மாட்டேன். மற்றொரு பெண்ணையும் ஏற்றுக் கொள்ள மாட்டேன். இதே போன்ற உறுதிமொழியை நீயும் எடுத்து இந்த இஞ்சியைத் தின்ன வேணும்!'' உடனே நாக மணப் பெண் இஞ்சியைச் சிறிது தின்றபடியே, ''நான் உன் மனைவி. நீர் என் கணவர். நான் மற்றொரு கணவனை ஏற்கமாட்டேன். நாம் இருவரும் கணவனும் மனைவியுமாகி விட்டோம். இதனை நிரூபிக்க நீங்களும் இஞ்சியை உண்ண வேணும்!'' என்பாள். இந்த உறுதிமொழியில் நாகர் கல்யாணம் முடிந்து விடுகிறது.

ஆதாரம் : பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாகர்கள்.

தகவல் : பி. எஸ். எம்.

---

தால், இங்கு வந்திருக்கவும் மாட்டேன்....''

## தெரியாமல்தான் சொன்னார்களா? நகைச்சுவையாக நவின்றார்களா?



கேள்வி: மோதிலால் நேருவின் மனைவியின் பெயர் என்ன ?

பதில்: மிஸஸ் மோதிலால் நேரு

கேள்வி: உலகம் சுற்றிய முதல் வாலிபன் யார் ?

பதில்: திரு எம். ஜி. ராமச்சந்திரன்

கேள்வி: குபேரனின் வாகனம் யாது ?

பதில்: ஜம்போ ஜெட்.

25-5-71 சென்னை வானொலி நிலையத்திலிருந்து ஒலிபரப்பான ''இளையபாரதம்: வினா — விடை'' நிகழ்ச்சியில் மாணவர்கள் அளித்த விடைகள் இவை!

— ''பாணன்''

---

யும் அவநம்பிக்கையும்தான். இந்த நாட்டை விட்டும், இந்த உலகத்தை விட்டுமே, நான் போய்விட விரும்புகிறேன். அதற்கு முன்னால் உன்னை ஒரு தடவை பார்த்து விடைபெற்றுப் போகலாம் என்றுதான் வந்தேன். ஒரு சமயம் என்னிடம் நீ ஒரு வரம் கோரினாய். காலில் விழுந்து மன்றாடிக் கேட்டுக் கொண்டாய். கையெடுத்துக் கும்பிட்டு இரந்தாய். என் ஆத்திரத்தினாலும் மூர்க்கத்தனத்தினாலும் நீ கோரியதை நான் கொடுக்கவில்லை. பிறகு ஒவ்வொரு கணமும் அதை நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அதற்கு ஏதேனும் பரிகாரம் உண்டானால், அதைச் செய்து விட்டுப் போகலாம் என்று வந்தேன். நந்தினி! சொல்! எந்த விதத்திலாவது அதற்கு நான் பரிகாரம் செய்ய முடியும் என்றால் சொல்!''

இவ்வாறு இரக்கம் ததும்பும் குரலில் கூறிய கரிகாலனைப் பார்த்து நந்தினி, ''கோமகனே! அதற்குப் பரிகாரம் ஒன்றும் கிடையாது. இறந்தவர்கள் இறந்தவர்கள்தான்! இறந்தவர்களைப் பிழைக்கச் செய்யும் சக்தி இந்த உலகில் யாருக்கும் கிடையாது. கதைகளிலே காவியங்களிலே சொல்கிறார்கள். நாம் பார்த்ததில்லை'' என்றாள்.

''இறந்தவர்களைப் பிழைக்கச் செய்ய முடியாது. அது உண்மைதான்! ஆனால் உயிருக்கு உயிர் கொடுத்துப் பரிகாரம் தேடலாம் அல்லவா? இதோ பார்! என்னிடம் இனியும் மறைக்க வேண்டாம். இங்கு நீ எதற்காக வந்தாய், என்னை எதற்காக வரச் சொன்னாய், என்னத்திற்காகப் பழுவேட்டரையரைத் தஞ்சைக்கு அனுப்பினாய் என்பதெல்லாம் எனக்குத் தெரியாது என்று எண்ணாதே! நீயும் நானும் சின்னஞ் சிறுவர்களாயிருந்த நாளிலிருந்து உன் மனத்தில் எழும் எண்ணங்களை அறியும் சக்தி எனக்கு உண்டு. எனக்கு ஆத்திரம் ஊட்டி நீசத்தனமான செயல் புரியும்படி செய்வதற்காகவே வீரபாண்டியனுடைய உயிருக்காக நீ மன்றாடினாய். என் பக்கத்திலிருந்து என்னை வதைத்துக் கொண்டிருப்பதற்காகவே பெரிய பழுவேட்டரையரை நீ மணந்து தஞ்சைக்கு வந்தாய். நான் காஞ்சியில் நிம்மதியுடன் இருப்பது உனக்குப் பொறுக்கவில்லை. அதனாலேயே இந்தக் கடம்பூர் அரண்மனைக்கு வரச் செய்தாய். வீரபாண்டியனுடைய வாளினால் என்னைக் கொன்று பழி முடிக்கும் நோக்கத்துடனேயே நீ இவ்விடத்துக்கு வந்திருக்கிறாய். அந்த உன்னுடைய நோக்கத்தைத் தடையின்றி நிறைவேற்றிக் கொள்! அதற்காகவே கந்தமாறனையும் அவன் தங்கையையும் அப்புறப்படுத்தினேன். இதோ! இந்த வாளைப் பெற்றுக் கொள்! உன் பழியை முடித்துக் கொள்!'' என்று கூறிக் கரிகாலன் வாளை நீட்டினான்.

நந்தினி வாளை வாங்கிக்கொண்டாள். வாளைப் பிடித்த அவளுடைய கைகள் நடுங்கின. பின்னர் அவள் உடம்பெல்லாம் நடுங்கியது. கண்களில் கண்ணீர் ததும்பியது. இதயத்தைப் பிளக்கும் சோகக் குரலில் விம்மலும் தேம்பலும் கலந்து வந்தன.

''நந்தினி! இது என்ன அதைரியம்? இந்த மனத் தளர்ச்சி ஏன்? நீ பட்டர் குடும்பத்தில் வளர்ந்தவள்; ஆனால் வீரமறக் குலத்தில் பிறந்தவள் அல்லவா? ஆட்டு மந்தையில் வளர்ந்தபடியால் சிங்கக் குட்டி தன் இயல்பை இழந்துவிடுமா? இதோ பார்! உன் அந்தரங்கத்தை நான் அறிவேன். உன் பழியை முடிப்பதற்குக் கந்தமாறனையோ, பார்த்திபேந்திரனையோ, வந்தியத்தேவனையோ நீ ஏவிவிட வேண்டாம். அவர்கள் மீது எனக்குக் கோபத்தை உண்டாக்கவும் வேண்டாம். உன் சபதத்தை நீயே நிறைவேற்றிக் கொள்! உன் பழியை உன் கையினாலேயே முடித்துக் கொள்! யாராவது இங்கே மறுபடியும் வந்து தொலைந்துவிடலாம். கந்தமாறன் தன் தங்கையை அன்னையிடம் சேர்ப்பித்து விட்டுத் திரும்பி வருவான். பார்த்திபேந்திரனும் சம்புவரையரும் திரும்பி வரும் நேரமும் ஆகிவிட்டது. அவர்களுடனே என் பாட்டன் மலையமானும் வந்தாலும் வரலாம். பழுவேட்டரையர் கொள்ளிடத்து வெள்ளத்தில் போயிருப்பார் என்று நான் நம்பவில்லை. அவரும் திடீரென்று வந்தாலும் வரக் கூடும்.

# உனது இனிமையின் ஆச்சரியம்...

# ...KCP மிட்டாய்களின் ருசியே.

சொல்லில் அடங்கா பல்வேறுபட்ட பொருள்கள், கற்பனை செய்ய முடியாத அளவு தேங்காய், கொடி மாதுளை, அத்திப்பழம், ஆப்பிள், எலுமிச்சை, வாழை, ஆரஞ்சு, வெண்ணை மற்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட பொருள்களால் செய்யப்பட்டது.
KCP மிட்டாய்களின் ஒரு தனிப்பட்ட சிறப்பு: அதன் இனிப்பு காரணம், அதற்கு உபயோகமாகும் தண்ணீர், மின்விசை அணுக்களால் பக்குவப் படுத்தப்பட்டது.
KCP மிட்டாய்கள் திடமான உடல் ஆரோக்கியத்திற்கு என்றே செய்யப்படுவதுடன்-குளிர் சாதன அமைப்புள்ள தொழிற்சாலையில் தானே இயங்கும் இயந்திரங்களால் கைபடாமல் அடுக்கப்படுகிறது.
KCP மிட்டாய்கள் சில்லரையாகவும், அழகான சிறிய டின்களிலும் கிடைக்கிறது. இன்றே வீட்டிற்கு சிலவற்றை எடுத்துச் செல்லுங்கள்—கட்டாயம் உங்கள் மக்கட் செல்வங்கள் அவைகளை விரும்புவார்கள்!

KCP மிட்டாய்கள்-கலவையில் மாறுபட்டவை
தரத்தில் முதல்தரம்






**கே. சி. பி. லிமிடெட்**
**38, மவுண்ட் ரோடு,**
**சென்னை-6.**

SISTA'S-KCP-3 TA

## 'டெலி' வந்து விட்டது: 'ஃபோன்' எங்கே...?



கல்கத்தாவிலிருக்கும் ரிஷிகேஷ் தத்தா என்பவர், "என்னுடைய பெயர்; புதிய டெலிபோன் டைரக்டரியில் இருக்கிறது. டெலிபோன் நம்பரும் இருக்கிறது. ஆனால் நான் கேட்டிருந்த டெலிபோன் மட்டும் இன்னும் வந்த பாடில்லை" என்று 'ஸ்டேட்ஸ்மன்' கடிதம் பகுதிக்கு எழுதியிருக்கிறார்.

—"பாபு"

---

உன் பழியை முடித்துச் சபதத்தை நிறைவேற்றிக் கொள்ள இதைக் காட்டிலும் நல்ல சந்தர்ப்பம் வரப் போவதில்லை. என்னைக் கொல்லுவதினால் எனக்கு நீ எவ்விதத் தீங்கும் செய்தவனாகமாட்டாய்! பேருதவி செய்தவளாவாய்!'' என்றான்.

நந்தினி பொங்கி வந்த விம்மலை அடக்கிக்கொண்டு, ''கோமகனே! தங்களிடம் நான் எதையும் மறைக்கவும் இல்லை: மறைக்க விரும்பவும் இல்லை. நான் இங்கு வந்ததின் நோக்கம் பற்றித் தாங்கள் கூறியதெல்லாம் உண்மைதான். தங்களை இங்கு வரச் சொன்னதின் நோக்கமும் அதுதான். ஆனால் சந்தர்ப்பம் நேர்ந்திருக்கும் சமயத்தில் என் கைகளில் வலிவு இல்லை; என் நெஞ்சிலும் தைரியம் இல்லை. தாங்கள் என்னைத் தேடி வரும் காலடிச் சத்தம் கேட்டவுடனேயே என் கையிலிருந்த வாள் நழுவிக் கீழே விழுந்து விட்டது. இதோ பாருங்கள்! வாளைப் பிடித்திருக்கும் என் கரங்கள் நடுங்குவதை!'' என்றாள்.

''ஆம், ஆம்! அதைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். ஆனால் அதன் காரணந்தான் எனக்குத் தெரியவில்லை. உன் நெஞ்சம் ஒரு சமயம் எவ்வளவு உறுதியடைந்திருந்தது என்பதை நான் அறிவேன். தேவேந்திரனுக்காக வஜ்ராயுதத்தைச் செய்து கொடுத்த பிறகு அதில் மீதமான உலோகத்தைக் கொண்டு பிரம்மதேவன் உன் இருதயத்தைப் படைத்திருக்க வேண்டும் என்று நான் எண்ணுவதுண்டு. அப்படிப்பட்ட உன் நெஞ்சு இவ்விதம் இளகிவிட்டதன் காரணம் என்ன?....''

'' தங்கள் தோழர் வந்தியத்தேவர் சொன்ன செய்திதான் காரணம்!''

''ஆகா! நீயும் நானும் உடன் பிறந்தவர்கள் என்று அவன் கண்டுபிடித்துக் கொண்டு வந்த செய்தியைத்தானே சொல்லுகிறாய்? அன்றைக்கு ஏரிக்கரைத் தீவில் நாம் பேசிக்கொண்டிருந்த போது நீ அதை நம்பவில்லையென்று சொன்னாயே? நம்மை மறுபடியும் பிரித்து வைப்பதற்காக யாரோ செய்திருக்கும் சூழ்ச்சி என்று கூறினாயே?''

''நான் அதை நம்பக் கூடாது என்று தான் பார்த்தேன். அதற்காக எவ்வளவோ பிரயத்தனம் செய்தேன். ஆனால் இன்று அவர் கூறிய வேறொரு செய்தி என் நெஞ்சுறுதியை அடியோடு குலைத்து விட்டது.''

''ஆகா! அது என்ன? இன்னும் ஏதாவது புதிய கற்பனையா? புதிதாக வேறு என்ன கூறினான்?''

'' என்னைப் பெற்ற அன்னையைப் பற்றிச் சொன்னார். அவரை இலங்கைத் தீவில் பார்த்ததாகக் கூறினார். அதை நான் நம்ப மறுப்பதற்குக் காரணம் எதுவும் இல்லை. கோமகனே! முன்னொரு தடவை நான் ஒரு வரம் கேட்டேன். அதைத் தாங்கள் கொடுக்கவில்லை. அதற்காக இன்று வரை வருத்தப்படுவதாகச் சொன்னீர்கள். இன்று மறுபடியும் ஒரு வரம் கேட்கிறேன். இதையாவது கொடுப்பீர்களா?''

''வரம் இன்னது என்று குறிப்பிட்டுக் கேட்டால், கொடுக்க முடியும் முடியாது என்று சொல்கிறேன்.''

''கோமகனே! வீரபாண்டியனுடைய மரணத்துக்குப் பழி வாங்குவதாக நான் சபதம் செய்தது உண்மைதான். மீன் சின்னம் பொறித்த இந்தப் பாண்டிய குலத்து வாளினால் ஒன்று தங்களைக் கொல்லுவேன், அல்லது என்னை நானே கொன்று கொண்டு மாய்வேன் என்று சபதம் எடுத்துக் கொண்டேன். தங்களைக் கொல்வதற்கு என் நெஞ்சிலும் துணிவு இல்லை; என் கைகளிலும் வலிவு இல்லை. என்னை நானே கொன்று கொண்டு தங்கள் முன்னாலேயே மடியலாம் என்று எண்ணினால், அதற்குப் போதிய பலம் என் கைகளில் இல்லை. அரைகுறையாக முயன்று, என் உயிர் போகா விட்டால் என்ன செய்வது என்று பயமாயிருக்கிறது. ஐயா! என் சபதத்தை நிறைவேற்றுவதற்கு உதவி செய்யுங்கள்! இந்த வாளைத் தாங்களே வாங்கிக் கொண்டு தங்கள் கையினால் என்னை வெட்டிக் கொன்று விடுங்கள்! அப்போது என் சபதம் முடிந்துவிடும். இந்த ஜன்மத்தில் மட்டுமின்றி இனி வரும் பிறவிகளிலும் தங்களிடம் நன்றி உள்ளவளாவேன்!''

இவ்விதம் கூறிக் கொண்டே நந்தினி நீட்டிய வாளை, மறுபடியும் ஆதித்த கரிகாலன் வாங்கிக் கொண்டான்.

''ஹா ஹா ஹா'' என்று அந்த அரண்மனை முழுதும் எதிரொலி செய்யும்படி பயங்கரமாகச் சிரித்தான்.

(தொடரும்)

# இப்பெண்ணின் பேரெழிலுக்குக் காரணமென்ன?




# முத்தென ஒளிரச் செய்யும் லக்மே வேனிஷிங் க்ரீம்

லக்மே வேனிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தில் மறைந்து செயலாற்றுகிறது. அது உடனடியாக உங்கள் முகத்தை எழிலோங்கச் செய்கிறது. சிறிது தடவிப் பாருங்கள். முத்துப் போல் ஒளிரச் செய்யும் அதன் விசேஷ செயலாக்கம் விந்தை புரிவது தெரியவரும். உங்கள் முகமலர் முத்தென ஒளிரும். இந்த இலேசான படிமானத்தின் மீது சிறிது லக்மே முகப்பவுடர் பூசுங்கள். இப்போது கண்ணாடியில் பாருங்கள். நீங்கள் எழிலோங்கி எடுப்பாக விளங்குவீர்கள் !

## லக்மே வேனிஷிங் க்ரீம்




ASP/L-86

சமீபத்தில் ஜப்பானில் நடைபெற்ற டேவிஸ் கோப்பை டென்னிஸ் பந்தயத்தில், இந்தியா 3 - 2 என்ற எண்ணிக்கையில் வெற்றி பெற்று விட்டது என்றறிந்ததும் முகர்ஜி, யானகியோடு ஆடுகையில் தாமது திறமை முழுவதையும் காட்டவில்லை என்பதாக யானகி குற்றம் சாட்டினர். இது உண்மையல்லவென்றும் 'மைதானப் பண்பாடு' அற்றுத் தம்மை யானகி தாக்குவதாகவும் முகர்ஜி கூறினர். வேறு பல ஆட்டங்களில் 'மைதானப் பண்பாடு' செயல்பட்ட விதத்தை நினைவு கூர்வது இச்சமயத்தில் நலமல்லவா?




ஆசிய கால் பந்தாட்டப் போட்டி சமீபத்தில் பாங்காக்கில் நடைபெற்றது. இஸ்ரேல் மக்காபி இளைப்பினர் மலேசியா தாய்லந்து, இந்தியா, தென்கொரியா ஆகிய கோஷ்டிகளோடு ஆடி இறுதி ஆட்டத்துக்கு வந்து சேர்ந்தனர். இறுதி ஆட்டம் இராக்குக்கும் இஸ்ரேலுக்கும் இடையில் நடைபெற வேண்டும். தொன்றுதொட்டு இருந்து வரும் விரோதம் காரணமாக இராக் ஃபைனல் ஆட்டத்தில் இஸ்ரேலோடு ஆட மறுத்து விட்டது!

நாட்டுக்கு நாடு விரோதமிருக்கலாம். ஆனால் விளையாட்டில் விரோதம் தலை தூக்க வேண்டுமா? கடைசியில் இஸ்ரேலே நான்காவது ஆசிய கால் பந்தாட்டப் போட்டியில் வென்றதாக அறிவிக்கப்பட்டது.

□ 1955ம் வருஷம், யார்க்ஷயர் கோஷ்டிக்கு எதிராக காப்டன் ஹெரால்ட் ஸ்டீபன்ஸனும் கென் பாம்மரும் மட்டை பிடித்து ஆடிக் கொண்டிருந்தார்கள். விரைவாகப் பந்து வீசுவதில் மன்னரான ட்ரூமன் வீசிய பந்தில் காப்டன் ஸ்டீவன்ஸன் ஒரு பவுண்டரி எடுத்துவிட்டார். 'தம் பந்தில் பவுண்டரி அடிக்கவா' என்று விழித்துப் பார்த்தார் ட்ரூமன்.

அச்சமயம் காப்டன் ஸ்டீபன்ஸன் கென் பாம்மரைக் கூப்பிட்டு, "கென்! ட்ரூமனிடம் சென்று அவருக்குப் பின்னால் பறந்து கொண்டிருக்கும் காகிதத்தை அப்புறப் படுத்தச் சொல்லு!" என்றார்.

கென் பாம்மரும் ட்ரூமனிடம் இதை எப்படிச் சொல்வது என்று தயங்கியபடியே, "நீங்கள் இன்னொரு பந்து வீசுவதற்கு முன்னால் அந்தச் சிறிய காகிதத்தை அப்புறப் படுத்த முடியுமா என்று காப்டன் கேட்கச் சொன்னார்" என்று பவ்யமாகப் பேசினர்.


முகர்ஜி


கிருஷ்ணன்

உடனே ட்ரூமன் கடுங் கோபத்துடன் கத்தினர்: "உங்கள் காப்டன் என்னை யாரென்று நினைத்திருக்கிறார்? நான் ஒன்றும் நகரசபைக் குப்பைக்காரன் இல்லை என்று அவருக்குச் சொல்லுங்கள்!"

□ 1963ம் வருஷம் லார்ட்ஸ் மைதானத்தில் மேற்கிந்திய கோஷ்டிக்காக புச்சர் ஆடிக் கொண்டிருந்தார். மூன்றும் நாள் ஆட்டத்துக்கு ஹோட்டலிலிருந்து புறப்படும்போது அவரது மனைவியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. வெகு நாட்களுக்குப் பிறகு வந்த கடிதம். அவரது மனைவி முதல் பிரசவத்தை எதிர் பார்த்துக் காத்திருந்தாள். ஆயினும் ஆட்டத்துக்குப் புறப்பட்ட பிறகு கடிதத்தைப் பிரித்துப் பார்க்க புச்சருக்கு மனமில்லை. காலை ஆட்டத்தை முடித்து விட்டு உணவு வேளையில் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தார். அவரை அக்கடிதம் பெரும் துயரத்தில் ஆழ்த்திவிட்டது. அவரது மனைவிக்கு 'குறைப் பிரசவம்' என்று கடிதத்தில் கண்டிருந்தது. என்ன செய்வார், பாவம்! இருப்பினும் புச்சர் தமது துயரத்தை மறந்து உயிரை விட்டு ஆடி 133 ரன்கள் எடுத்தது அனைவரையும் திகைக்க வைத்தது.

□ 1964ம் வருஷம் ஆஸ்திரேலியாவுக்கும் இங்கிலாந்துக்கும் டெஸ்ட் பந்தயம் நாட்டிங்காமில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இந்தப் பந்தயத்தைக் காண எடின்பரோ கோமகன் ஹெலிகாப்டரில் வந்து இறங்கினர். அவர் எதிரேதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது.

ஆஸ்திரேலிய விக்கெட் கீப்பர் கிரௌட், டிட்மனை ரன் அவுட்டாக்கியிருக்கலாம். இரு ஆட்டக் காரர்கள் மோதிக் கொண்ட போது, ஹாக் பந்தைப் பாய்ந்து பிடிக்கும் வேகத்தில் டிட்மஸை மோதித் தள்ளினர். டிட்மஸ் இவ்வாறு தாக்குண்டதால் பாட்ஸ்மனுக்குரிய கோட்டை விரைவில் வந்தடைய முடியவில்லை.

ரயில் ஓட்டிக் கொண்டிருந்த போது டிரைவர் "ஃபயர்மேனை" கேட்டார்: "பச்சைக்கொடி, சிவப்புக் கொடிதான் தெரியும், அதோ தோளில் ஒருவர் காவி நிறக் கொடி காட்டுகிறாரே, அதற்கு என்ன அர்த்தம்?"

"வரிகளைச் செலுத்திவிட்டுக் காசிக்குக் கிளம்பியிருக்கிறார்!"

"உங்களுக்குத் தெரியாது சார். இத்தனை வரி போட்டால் தான் நாம் அயல் நாட்டுக்குத் திருப்பிக் கொடுக்க முடியும்."

"கடனைத்தானே?"

"இல்லை, வட்டியை!"

சிரிக்கவா போட்டேன்.. வரி?

கே. வி. முரளி

"ரயில் கட்டணம் ஏறிய பிறகு முன்போல் உன் மாமியார் வருவதில்லையா?"

"கொஞ்சம் பண வித்தியாசம்தானே என்று இப்போதெல்லாம் பிளேனில் வந்துவிடுகிறார்!"

"ஐயா, சாமி, இரண்டு பைசா தர்மம் பண்ணுங்க."

"போப்பா, வரிகள் போகப் பாக்கிச் சம்பளத்தை வீட்டுக்குக் கொண்டு போறேன், அதையும் உன்னிடம் கொடுத்து விட்டால், நான் என்ன செய்வது?"

"வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்கு நான் நிதியமைச்சருக்கு ஒரு யோசனை எழுதப் போகிறேன்."

"என்ன அது?"

"வேலையில்லாத பட்டதாரிகளுக்கெல்லாம் வரி போட்டு விட்டால் அவனவன் கிடைக்கும் வேலையில் தொற்றிக்கொள்ள மாட்டானா!"

அவர் வருவதற்கு முன்பே விக்கெட் கீப்பர் கிரௌட்டின் கைகளில் பந்து இருந்தது. டிட்மஸை அச்சமயத்தில் 'ரன் அவுட்' ஆக்கியிருக்கலாம்; ஆனால் கிரௌட் டிட்மஸை தம் கோட்டுக்குள் வரும் வரை ஒன்றும் செய்யவில்லை. பந்தை விக்கெட் அருகே கொண்டு செல்வது போல் பாவனை செய்தாரே ஒழிய 'அவுட்'டாக்கவில்லை. பௌலரிடம் பந்தை வீசி விட்டார். 'பண்பாட்டின் சிகரம்' என்று இந்த நிகழ்ச்சி போற்றப்பட்டது.

□ 1959 – 60ம் ஆண்டில் பீட்டர் மே தலைமையில் எம். ஸி. ஸி. கிரிக்கெட் குழு மேற்கிந்தியக் கிரிக்கெட் குழுவுடன் கிரிக்கெட் ஆடிக் கொண்டிருந்தது. இன்னும் இருபது ரன்கள் பார்படாஸ் எடுத்தால் வெற்றி பெற்றுவிடும் என்ற நிலையில் மழை 'கொட்டு கொட்டு' என்று கொட்டியது. இந்த மாதிரி நிலையில் ஆங்கிலேய ஆட்டக்காரர்கள் மைதானத்தை விட்டு உள்ளே வந்திருக்கலாம். ஆனால் பீட்டர் மேயும் காலின் கௌட்ரியும் தங்கள் ஆங்கில கோஷ்டியோடு சொட்டச் சொட்ட மழையில் நனைந்தபடி ஆடினார்கள். பார்படாஸ் வெற்றி பெறும்வரை அவர்கள் மைதானத்தில்பந்து வீசி பீல்டிங் செய்தது பண்பாட்டுச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது.

□ சென்னையில் மெக்ஸிகோவைச் சேர்ந்த ஒசுனுவுக்கும் நமது கிருஷ்ணனுக்கும் டேவிஸ் கோப்பைப் பந்தயம் நடந்து கொண்டிருந்தது. ஆட்டத்தில் கிருஷ்ணனின் பக்கம் வெற்றி திரும்பும் தருணம், நடுவர் கிருஷ்ணனுக்கு எதிராக ஒருதவறான தீர்ப்பை வழங்கி விட்டார். டென்னிஸ் ரஸிகர்கள் ஹூங்காரம் செய்தனர். கிருஷ்ணன் பதற்றப்படாமல் மறுபடியும் அதை ஆடுவதற்கு இணங்கிப் பண்பாட்டோடு நடந்து கொண்டதை இன்றும் டென்னிஸ் ரஸிகர்கள் நினைவுகூருகிறார்கள். கிருஷ்ணன் அன்று டேவிஸ் கோப்பைப் பந்தயத்தில் தோற்றார்; பண்பில் வென்று விட்டார்!

□ இங்கிலாந்து ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஆஸ்திரேலிய கிரிக்கெட் கோஷ்டிக்கும், இங்கிலாந்து கோஷ்டிக்கும் நடந்த கிரிக்கெட் டெஸ்டைப் பார்வையிட்டுக்கொண்டிருந்தார். அப்போது அவருக்கு அவசரமான பணி இருப்பதாகத் தகவல் வந்தது. அச்சமயம் ஆஸ்திரேலிய கிரிக்கெட் மன்னர் பிராட்மன் செஞ்சுரியை நெருங்கிக் கொண்டிருந்தார். அவர் 'செஞ்சுரி' அடித்து முடியும் வரை ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் லார்ட்ஸ் மைதானத்தை விட்டு அகல மறுத்துவிட்டார். பிராட்மன் செஞ்சுரியை நெருங்கிக் கொண்டிருக்கும் போது தாம் எழுந்து போனால் அது அந்த ஆட்டக்காரருக்கு இழுக்கு என்பதால் மன்னர் மாண்போடு அமர்ந்திருந்தார், அவசர வேலையையும் பொருட்படுத்தாமல்.

—குண்டுமணி



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
‘உணர முடியாப் பசி’ உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது அந்த ‘உணர முடியாப் பசி’யைத் தீர்ப்பதற்கு



உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது என்பதை எந்த டாக்டரும் கூறுவார். இந்த ‘உணர முடியாப் பசி’யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு ‘உணர முடியாப் பசி’யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச் சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருடகளும்; நரம்புகளுக்கு உரமூட்ட ஃபாஸ் ஃபேட்டுகள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.



# அருமையான சுவை என்பது

## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு

# என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குத்தான் எவ்வளவு கரகரப்பான, சுவைமிக்க வழி! பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன — புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




**பார்லே க்ளுகோ** பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குகின்றன

இந்தியாவின்
மிக அதிகமாக
விற்பனையாகும்
பிஸ்கெட்டுகள்

everest/7q/PP Tam

# பிரதமரையும் ஈர்த்த பவானி ஜமுக்காளம்



ஆஸ்திகக் காவலர்கள்!

அரசியல் நாயகர்கள்!

கலைத் திலகங்கள்!

கற்பனை மன்னர்கள்!

எல்லோருமாக அந்த மண்டபத்தில் ஒருங்கே கூடியிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் கருத்துக்களைத் தங்களுக்குள் பரிமாறிக் கொள்ள வந்தவர்களாகத் தெரியவில்லை. தங்களைப் பார்க்க வந்த பொதுமக்களைப் பார்த்துப் புன்முறுவல் பூப்பதுடன் இருந்து விடுகிறார்கள்.

ஸ்ரீமதி சாந்தா நாராயணனும் இஞ்சினியரிங் படிப்பில் தேர்ச்சி பெற்ற இனோஜூர் கிருஷ்ணமூர்த்தியும் தாம் மேலே சொன்ன பிரமுகர்களை யெல்லாம் அழைத்து வந்து நிறுத்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்கள்!

ஆம்! ரங்கோலி வண்ணச் சித்திரங்களாக அத்தனை பேரும் வந்து காட்சியளிக்கிறார்கள். வண்ணப் பொடிகளால் இப்படி உயிரோட்டமுள்ள உருவங்களைத் தீட்ட முடிகிறதே என்று பார்ப்பவர்கள் வியப்படைகிறார்கள்.

ஸ்ரீமதி சாந்தா நாராயணனுக்கு இந்த ரங்கோலிக் கோல அநுபவம் பதினைந்து வருடங்களாக உண்டு. வேணு கான வித்வான் பல்லடம் சஞ்சீவிராவின் பேத்தியாகச் சங்கீதக் குடும்பத்தில் வந்த இவருக்கு இசைத் துறையில் ஈடுபாடு இல்லாமல் இந்த ஓவியக் கலைத்துறையில் ரசனை ஏற்பட்டது ஆச்சரியமான விஷயம். பொள்ளாச்சியில் உள்ள ஓர் அம்மையாரிடம் இந்த வித்தையைக் கற்றுக் கொண்ட இவர் வரைந்த முதல் வண்ணக் கோலம் 'வாமனாவதாரம்'. காலப் போக்கில் அவர் ஆர்வம் பிரும்மாண்டமாய் வளர்ந்ததில் வியப்பு இல்லை.

சென்னை நகரப் பொதுமக்கள் இந்தக் கலை வண்ணத்தைக் கண்டு ரசிக்க வேண்டும் என்ற ஆவலில், திருவேட்டீசுவரர் சபா காரியதரிசி நண்பர் முத்து. என்.கே.டி. கலையரங்கை ஒட்டிய மாடிப்பூமி மண்டபத்தில் ஒரு ரங்கோலிக் கலைக் காட்சிக்கு ஏற்பாடு செய்தார்.

ஒரு வரிசையில் கடவுளர் சித்திரங்கள். வெண்ணெய் திருடும் கண்ணனிலிருந்து வேங்கடாசலபதி வரை. அடுத்து ஆரம்பத்தில் கூறியபடி ஆஸ்திகக் காவலர்களும் அரசியல்வாதிகளும், கலைஞர்களும் இன்னும் பலரும். மற்றொரு பக்கத்தில் காட்சி தரும் பத்தமடைப் பாய், பவானி ஜமுக்காளம், கால்மிதி போன்றவையும் ரங்கோலிச் சித்திரங்களே!

இந்தக் கலைக் காட்சியில் மனித உருவங்களைத் தத்ரூபமாகத் தீட்டிய பெருமை இனோஜூர் கிருஷ்ணமூர்த்தியைச் சேரும். கல்லூரி நாட்களிலே அவர் முதன் முதலாக ரங்கோலி வண்ணச் சித்திரம் தீட்டத் தமது கல்லூரி முதல்வர் ஜி.ஆர். தாமோதரனையே தேர்ந்தெடுத்தார். கடந்த மூன்று வருடங்களாக அவர் ஸ்ரீமதி சாந்தா நாராயணன்கூட இருந்து இந்தக் கலைத்துறையில் பங்குபெற்று வருகிறார்.

சராசரியாக ஒரு கோலத்துக்கு இருபது ரூபாய் வரை செலவாகுமாம். கோலப் பொடி, உபயோகப்படுத்தப்பட்ட காப்பிப் பொடி, கரிப் பொடி, தேங்காய்த் துருவலுக்குச் சாயம் கலந்து உலர்த்தியபின் கிடைக்கும் மிருதுவான கலவை இவையெல்லாம் கலைத் திறமையுடன் ஒன்றுசேரும் போது அங்கு ஒரு கலர் ஃபோட்டோவே தோன்றி விடுகிறது.

ஸ்ரீமதி சாந்தா நாராயணனை நன்கு அறிந்தவர்கள் அவரை 'ஜமுக்காள சாந்தா' என்றுதான் குறிப்பிடுவார்கள். காரணம் உண்டு. சில ஆண்டுகளுக்குமுன் பாரதப் பிரதமர் இந்திராகாந்தி சென்னை வந்திருந்த போது அவருக்கு ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் ஒரு வரவேற்பு. அங்கே ஸ்ரீமதி சாந்தா நாராயணன் தமது அபிமான பவானி ஜமுக்காள சித்திரத்தைத் தீட்டியிருந்தார். அந்த வண்ணச் சித்திரத்தை அசல் நடைபாதை ஜமுக்காளமாக நினைத்துக் கொண்டு அதன் மேலே நின்று கொண்டே, ''ஓவிய ஜமுக்காளம் எங்கே?'' என்றாராம் பிரதமர்.

—பட்டினத்தார்



இடது: நண்பர்களுக்கிடையில் மகிழ்ச்சி பொங்கும் முகத்துடன் ஸ்ரீமதி சாந்தா நாராயணன்.

மேலே: இனோஜூர் கிருஷ்ணமூர்த்தி ரங்கோலி சித்திரத்தில் இறுதியாக ஏதோ நகாசு வேலை செய்கிறார்.

# சுழிக்காற்று

## அத்தியாயம் பதின்மூன்று

காளியப்பனைக் கைது செய்து விட்டார்கள் என்று அறிந்ததும் தாங்க முடியாத கோதிப்புடன், காதலனோடு காரில் ஏறிக் கிளம்பிய மஞ்சுளா பண்ணையை விட்டுச் சாமுண்டிக் கோட்டைக்கு வந்து ஒரு வீட்டுக் கதவை ஆவேசத்தோடு தட்டினாள் தடதடவென்று.

அவள் அவசரத்துக்கு அந்தக் கதவு பயப்படவில்லை. நிதானமாகத் தன் உடலை முறித்துக் கிரீச்சிட்டபடி ஒதுங்கிக் கொண்டது. கையில் காப்பி தம்ளருடன் நாற்பது வயது மதிக்கத்தக்க ஒருவர் தோன்றினார். அதிகாலை உடையுடன் காட்சியளித்த அவர் வாயிலிருந்த காப்பியை விழுங்கிவிட்டு, வந்தவளை வரவேற்கத் தம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ளுமுன் மஞ்சுளா தடதடவென்று அந்த வீட்டின் முன் ஹாலுக்குள் நுழைந்து பேசவும் ஆரம்பித்து விட்டாள். ''வக்கீல் சார், இவர்தான் என் வருங்காலக் கணவர். சேகர் என்று பெயர். நீங்கள் கேள்விப்பட்டிருக்க முடியாது இவரைப் பற்றி. அவர் இவருடைய நண்பர். கோபால் என்று பெயர். சேகர், இவர்தான் நீலமேகம். இந்த வட்டாரத்திலேயே மிகப் பிரபலமான வழக்கறிஞர். நம் காளியப்பனுக்கு இவ



ரைத்தான் வக்கீலாக அமர்த்தப் போகிறேன்'' என்று மடமட வென்று பொரிந்து தள்ளினாள் மஞ்சுளா.

வக்கீல் நீலமேகத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. காலைக் காப்பியை ரசிக்க முடியாமல் இப்படியொரு தடபுடலை அவர் விரும்பவில்லை என்பதை அந்த முகமே காட்டிற்று. ''காளியப்பன் யாரு? நான் இன்னும் அவனைப் பார்த்ததுகூட இல்லே...... நீங்களானால்...''என்று இழுத்தார் வழக்கறிஞர்.

இதனாலெல்லாம் மஞ்சுளா மனம் தளர்ந்து விடுவாளா? நீலமேகத்துக்குக் காளியப்பனைப் பற்றிச் சுருக்கமாகக் கூறி விளங்க வைத்துவிட்டு, ''இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் கண்மூடித்தனமாகக் காளியப்பனைக் கைது செய்திருக்கிறார். எங்கள் பண்ணைக் காரியதரிசி ராமுவின் மறைவுக்கு, பாலுவோட கொலைக்கு, நிர்மலா காணாமல் போனதற்கு எல்லாம் காளியைக் காரணமாக்கிக் குற்றம் சாட்டியுள்ளார் இன்ஸ்பெக்டர். 'ஹேபியஸ் கார்பஸ்'ன்னு சொல்லுவானே. அது தேவை இப்



போது எங்களுக்கு. எப்படியோ ஏதோ நீங்க கிளம்புங்க. இன்ஸ்பெக்டரைச் சந்திக்கணும்'' என்று துரிதப்படுத்தினாள்.

''ராமு கொலை செய்யப்பட்டான், நிர்மலா காணாமல் போனான்...இதெல்லாம் எனக்குச் கவலையான செய்திகள் மஞ்சுளா. இந்தச் சிக்கல்களில் என்னைக் கொண்டு போய் மாட்டி வைக்காதே, அம்மா!'' என்றார் நீலமேகம். அவர்



# உங்கள் குழந்தைக்கு 3 மாதம் ஆயிற்றா?

# பாரெக்ஸ் புகட்டுவீர்.






## இப்போது 100 கிராம் டின்னில் வருகிறது.

(280 கிராம் டின்னிலும் கிடைக்கிறது.)

மூன்றாவது மாதத்திலிருந்து உங்கள் குழந்தையின் போஷாக்குத் தேவைகளைப் பால் மட்டுமே பூர்த்தி செய்ய முடியாது. குழந்தைக்கு பாரெக்ஸ் தேவை. திட உணவுக்கு முதற்படி பாரெக்ஸ். குழந்தையின் மென்மையான சீரண சக்திக்கு உகந்த வகையில் பாரெக்ஸில் புரதம் உள்ளது.
25 பைசா தபால் தலை இணைத்து, பாரெக்ஸ் நூலை இலவசமாகப் பெற எழுதுக: டிபார்ட்மெண்ட் K-1, த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ பி (எந்த மொழியில் நூல் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**-க்ளாக்ஸோ தயாரிப்பு

சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.

CMGF-19-202-Tam

முகத்தில் 'இதேதடா சங்கடம்' என்ற உணர்ச்சி விரவிக் கிடந்தது.

''நீலமேகம் சார்....'' மஞ்சுளாவின் குரல் உறுதியாக ஒலித்தது. ''காளியப்பனுக்காக நீங்கள் வாதாடத்தான் வேண்டும். வாதாடவும் போகிறீர்கள்!'' ஜமீந்தார் வீட்டுப் பெண் என்ற அதிகாரம் அவள் குரலில் தொனித்தது.

''மஞ்சுளா, என் பிராக்டீஸ் எல்லாம் சிவில் வழக்குகள் என்று உனக்குத் தெரியாதா? கிரிமினல் வழக்குகளையே வெறுப்பவன் நான்'' என்றார் நீலமேகம்.

''இந்தக் கிரிமினல் வழக்கை நீங்கள் முதல் முதலாக ஏற்று நடத்தப் போகிறீர்கள். அதன் தலையில் அடித்து விழி பிதுங்க வைத்து வெற்றியும் காணப் போகிறீர்கள்'' என்று கூறிய மஞ்சுளா அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை. வந்த வேகத்துடனேயே காரில் போய் அமர்ந்தாள். அடுத்த விநாடி அவள் கார் போலீஸ் ஸ்டேஷனை நோக்கி விரைந்து கொண்டிருந்தது.

விஸ்தாரமான மேஜையின் முன்னால் அமர்ந்திருந்த ஏகாம்பரம் அமைதியான ஆனால் வேதனை கலந்த பார்வையோடு மஞ்சுளாவை வரவேற்றார். சுவரோரமாகப் போடப்பட்டிருந்த ஒரு நாற்காலியில் காளியப்பன் உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தில் கலவரம் கப்பிக் கிடந்தது. ஒரு மூலையில் போலீஸ் ஜவான் ஒருவன் 'அட்டென்ஷ'னில் நின்று கொண்டிருந்தான்.

''மஞ்சுளா! உன் அனுதாபத்துக்குரியவன்தானா இந்தக் காளியப்பன் என்பதை நன்றாக யோசித்துப் பிறகு செயல்படுவது நல்லது'' என்றார் இன்ஸ்பெக்டர். அவருக்கு மஞ்சுளாவின் நடவடிக்கைகள் பற்றி முன்னாலேயே தகவல் வந்து விட்டது.

மஞ்சுளா காளியப்பன் பக்கம் திரும்பிப்பார்த்தாள். பிறகு, ''இந்த ஏழை அப்பாவி உங்களுக்கு என்ன கொடுமை செய்தான்?'' என்று கேட்டாள்.

''உன் அனுதாபத்தையும் அன்பையும் பெற்ற அந்த ஏழை அப்பாவியை நானும்தான் என்ன செய்து விட்டேன்?'' என்றார் இன்ஸ்பெக்டர் முறுவலித்துக் கொண்டே.

''தனக்குத் தெரிந்த உண்மையைச் சொல்ல ஒருநாளும் அவன் மறுக்க மாட்டான்'' என்றவள் காளியப்பன் பக்கம் திரும்பினாள்.

''எனக்குத் தெரிந்ததை யெல்லாம் நான் ஒரு தடவை சொல்லியாகி விட்டதம்மா'' என்றான் காளி.

''தனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் அவன் கூறவில்லை.'' — இது இன்ஸ்பெக்டர்.

''காளி என்னிடம் எல்லாவற்றையும் கூறிவிடுவான். இல்லையா?'' என்றாள் மஞ்சுளா பரிவோடு. பிறகு ''இன்ஸ்பெக்டர் சார்! உங்களுக்குத் தெரிய வேண்டிய விஷயமென்ன?'' என்று கேட்டாள்.

''நிர்மலா மறைந்த அந்த நேரத்தில் அவன் எங்கே என்ன செய்து கொண்டிருந்தான் என்பது தெரிந்தாக வேண்டும் எனக்கு.''

''காளி, அந்தச் சமயத்தில் நீ எங்கே இருந்தாய்?''

காளி சொன்னான்: ''அப்போது என்ன மணி என்று எனக்குத் தெரியாது.''

''நிர்மலா காணாமற் போன நேரத்தைத்தானே குறிப்பிடுகிறாய்? நீ அவளை எங்கள் பண்ணை எல்லைக்குள் கொண்டு வந்து விட்ட ஒரு மணி நேரத்துக்குள்ளாகத்தான் அது நடந்திருக்கிறது. அதன் பிறகு நீ நிர்மலாவைப் பார்க்கவே இல்லையா?''

காளி பலமாகத் தலையை ஆட்டினான்.

''நிர்மலாவுக்கு நேர்ந்த கதியைப் பற்றி ஏதுமே அறியாதவனாகத்தான் நீ டவுனுக்கு உன் வண்டியை ஓட்டிக் கொண்டு போனாயா?''

'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகக் காளியின் தலை அசைந்தது.

''இதைப் பற்றிக் கேளுங்கள்...!'' என்று கூறியபடி தன் மேஜை டிராயரிலிருந்து ஓர் இரும்புச் சாமானை எடுத்து மேஜை மீது வைத்தார் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம். அது 'கிராங்க்' என்று சொல்லப்படும் மோட்டார் யந்திரத்தின் ஒரு சாதனம். அதன் மீது ஏதோ கறை படிந்து கருஞ் சிவப்பாக இருந்தது.

''காளியப்பா, இது உன் வண்டியினுடையதுதானே?'' என்று கேட்டாள் மஞ்சுளா. காளி 'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தான்.

''இது ரத்தக் கறையா?''

ஆமாம் என்பதற்காக மறுபடி தலையசைத்தான் காளி.

''மனித ரத்தமா?''

தலையசைத்தான்.

''அது யாருடைய ரத்தம் காளி?''

''என்னுடையது'' என்று கூறித் தன் வலது கையை நீட்டிப் புரட்டிக் காண்பித்தான். புறங்கை விரல் கணுக்களின் மீது தோல் வயண்டிருந்தது. ''நேற்றிரவு டவுனுக்குத் திரும்பும் வழியில் வண்டி மக்கர் செய்தது. பாட்டரி ரொம்ப வீக்காப் போச்சு. கிராங்க் ஷாப்ட் வேலை செய்யலே. செல்ஃப் எடுக்கலே. அதனாலே கையாலே சுத்தி ஸ்டார்ட் செய்யும்படியாயிட்டுது. கீழே இறங்கி அந்த இரும்புக் கம்பியை மாட்

டிச் சுழற்றும்போது கை வழுக்கிட்டுது. நடைபாதைக் கல்லிலே விரல் மோதித் தோல் வழண்டு போச்சு. அப்ப வந்த ரத்தம்தான் அது மேலேயுள்ள கறை. இப்படி எனக்குக் கை வழுக்கியதே இல்லே...''

இன்ஸ்பெக்டர் பொறுமை இழந்தவராகக் கத்தினார். ''ஏய், காளி! போதும் நிறுத்து உன் புளுகு மூட்டையை. என் நேரத்தை வீணாக்காதே'' என்று கூறிவிட்டு மஞ்சுளாவின் பக்கம் திரும்பி, ''அம்மா, நான் முடிவாகச் சொல்றேன். இவன்மீது தாங்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு இவன் அருகதை இல்லாதவன். நீங்கள் என்ன சொன்னாலும் இவன் வார்த்தையை நான் நம்பப் போவதில்லே. என்னிடம் இவன்தான் குற்றவாளி என்பதற்கு நிறையத் தடையங்களும் ஆதாரங்களும் இருக்கின்றன. அதன் பேரில் நான், காளியப்பனைக் கைது செய்யத்தான் போகிறேன். உங்களுக்காகத்தான் இத்தனை நேரம் இவனது பொய் மூட்டைகளைக் கேட்டுக் கொண்டிருந்தேன். போதும், தயவு செய்து...'' ஏகாம்பரம் தன் பேச்சை முடிக்கவில்லை. வாசல் கதவு திறந்தது. மிடுக்காக உடையணிந்த ஓர் உருவம் உள்ளே நுழைந்தது. அது வக்கீல் நீலமேகம்தான்.

''வாங்க, வக்கீல் சார்!'' என்று வரவேற்ற ஏகாம்பரம், ''என்ன வேணும்?'' என்று கேட்டார் கடுப்புடன்.

''நீலமேகம் அவர்கள் காளியப்பனுடைய வக்கீல்'' என்றாள் மஞ்சுளா முகம் மலர. ''நீங்கள் ஒரு நிரபராதியை அநியாயமாகக் குற்றம் சாட்டி அவமானப்படுத்துகிறீர்கள் என்று நீதிமன்றத்தில் வாதாடப் போகிறார்.''

''ஓ! அப்படியா சமாசாரம்?'' என்று ஏகத்தாளமாக நீட்டினார் ஏகாம்பரம். ''ஏன் வக்கீல் சார், அவங்க சொல்றது உண்மைதானா?''

''ம்... உண்மைதான் இன்ஸ்பெக்டர் சார். வழக்கு நீதி மன்றம் வரை போவானேன், அதற்கு அவசியமில்லாமல் செய்ய முடியுமா என்று பார்ப்பதற்காகக் காளியை விசாரிக்கலாமா என்று எண்ணுகிறேன்'' என்றார் வக்கீல் நீலமேகம் நிமிர்ந்தபடி.

''விசாரணை...?'' பலமாகச் சிரித்தார் இன்ஸ்பெக்டர். ''அதைத்தான் நான் இரவு முழுவதும் செய்திருக்கிறேன். இந்த வழக்கில் உண்மை வெளியாகும்வரை தொடர்ந்து அதைச் செய்யவும் போகிறேன். நீங்கள் உங்கள் விசாரணையை அடியிலிருந்து ஆரம்பியுங்கள். எனக்கு இப்போ ரொம்ப அவசியமாகத் தேவைப்படுவது கொஞ்சம் தூக்கம். அதைப் பூர்த்தி செய்துட்டு வரேன். நீங்கள் நல்லா விசாரணை செய்யுங்க. உதாரணமா முதல்லே இதைப் பத்தி விசாரியுங்க'' என்று கூறித் தம் மேஜை டிராயரைத் திறந்து பெண்களின் கைப் பை ஒன்றை எடுத்து மேஜை மீது போட்டார்.

''இது... இந்தப் பர்ஸ் நிர்மலாவுடையதுன்னு!'' என்று கூவினாள் மஞ்சுளா.

''ஆமாம். இது நர்ஸ் நிர்மலாவுடைய டம்பப் பைதான்'' என்றார் இன்ஸ்பெக்டர் நகைத்தபடி. ''இதிலே இப்போ பணமே இல்லே. நேற்றிரவு இதிலே ஏராளமான ரூபாய் நோட்டுகள் திணிக்கப்பட்டிருந்ததை நீங்கள் பார்த்தீர்கள் இல்லையா? அந்தப் பணத்திலே ஒரு பைசாகூட இப்போ இதில் இல்லே. இன்று காலையில் இந்தக் காலிப் பையை நான் உங்கள் காளியப்பனோட டாக்ஸியின் பின் பக்கத்து சீட்டின் குஷனுக்கு அடியில் கண்டு எடுத்தேன்! போதுமா?''

மஞ்சுளாவுக்கு மூச்சே நின்றுவிடும் போலாகி விட்டது. அவளால் சில விநாடிகள் பேசவே முடியவில்லை. காளியையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனை என்ன கேட்பது எப்படிக் கேட்பது என்றே புரியவில்லை. ஆனால் அந்த மௌனமே அவனுக்குப் பயங்கரமாகத் தோன்றியது. முடிவில் அவளே பேசினாள்.

''காளி... இது... எப்படி? அந்தப் பை உன் டாக்ஸியின் பின் சீட்டில் எப்படியப்பா வந்தது?'' திக்கித் திணறி ஒரு வழியாகக் கேட்க வேண்டியதைக் கேட்டே விட்டாள்.

காளி தனக்கு அதைப் பற்றி யாதொன்றும் தெரியாதென்று தலையசைத்தான்.

மஞ்சுளா, இன்ஸ்பெக்டரைப் பார்த்தாள். ''நிர்மலாவினுடைய டம்பப் பையை வேண்டுமென்றே யாரோ காளியின் டாக்ஸிக்குள் கொண்டு வந்து ஒளித்து வைத்திருக்கிறார்கள்.''

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்துக்கு ஆத்திரம் குமுறிக் கொண்டு வந்தது. ஆனால் அத்தனையையும் நாசூக்காக உள்ளுக்கு அழுத்திக் கொண்டு, தாம் மஞ்சுளாவின் கூற்றை நம்பத் தயாரில்லை என்பதற்கு அடையாளமாகத் தலையைப் பக்கவாட்டில் நிதானமாக அசைத்தார். மேஜை டிராயரைத் திறந்து படீரென்று மூடினார். மறுபடியும் திறந்து அதனுள் நிர்மலாவின் பர்ஸை வீசிவிட்டு அறைந்து சாத்தினார். தம் ஆத்திரத்தைக் காட்டுவதற்கு இதைவிட வேறு மார்க்கமில்லை, பாவம் அவருக்கு. டிராயரைப் பூட்டிக் கொத்

# சோப் ஒன்று-பலன் மூன்று!

# நீகோ கிருமிநாசினி சோப்

## மற்றெந்த சோப்பையும் விட

## உங்கள் சருமத்திற்கு

## மிகுந்த பாதுகாப்பளிக்கிறது

1 நீகோ சருமக் கிருமிகளைக் கொல்லுகிறது

2 நீகோ உடல் துர்நாற்றத்தைப் போக்குகிறது

3 நீகோ உடலைத் துப்புரவாக்கிப் பாதுகாப்பளிக்கிறது

உங்கள் ஆரோக்கியமான சருமத்தைப் பெற, நாள்தோறும் நீகோ சோப் தேய்த்துக் குளியுங்கள். நீகோவின் சுகாதார நுரையானது சரும நோய்க் கிருமிகளைக் கொன்று, உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. நீகோவிலுள்ள மருந்துப் பொருள்கள் வியர்வையினால் ஏற்படும் துர் நாற்றத்தைப் போக்குகின்றன. நீகோ சின்னஞ்சிறிய சருமத் தொற்றுகளையும் எதிர்த்துப் போராடி, சருமத்துக்கு வெண்மையளிக்கிறது. அதோடு மிருதுத்தன்மையும் புதுமையும் தருகிறது. இதுமட்டுமல்ல, முகப் பருக்கள் மற்றும் வேர்க்குருவிலிருந்தும் உங்கள் சருமத்துக்குப் பாதுகாப்பு தருகிறது. நீகோ, ஷாம்புவாகக்கூட இதைப் பயன்படுத்தலாம். இதனால் பொடுகு விழாமல் தடுக்கிறது. நீகோ, எனவே, இன்று முதலே, நீகோ சோப் உபயோகிக்கத் தொடங்குங்கள்




TRIPLE ACTION

**NEKO**

The Original Germicidal Soap

PARKE-DAVIS

JAISONS 73 Tam

# சிறு தொழில் அதிபர்களே!



புதிய
தொழில்
ஆரம்பியுங்கள்
விரிவுபடுத்துங்கள்
அல்லது
நவீனப்
படுத்துங்கள்

## அதற்கு
## யூகோபாங்க்
## நிதி உதவுகிறது

சொந்தமாக ஒரு சிறு தொழிலை ஆரம்பிக்க உங்களிடம் சிறந்த திட்டம் இருக்கலாம் அல்லது இருக்கும் தொழில்களை விரிவு படுத்த அல்லது நவீனப்படுத்த விருப்பப் படலாம். நிதியின்மை அதற்கு முட்டுக் கட்டையாக இருக்கத் தேவையில்லை. எங்களிடம் வாருங்கள். உங்கள் சொந்த தொழில் ஆரம்பிக்க அல்லது இருக்கும் தொழிலை விரிவு படுத்த அல்லது நவீனப்படுத்த உங்களுக்கு நிதி உதவி செய்ய முயற்சிக்கிறோம்.




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

யூகோ பாங்க் வளம் பெற வழி வகுத்தளிக்கின்றது

UCO-5/71

துச் சாவியைக் கையில் எடுத்துக்கொண்டார். சாவியின் கழுத்தை அழுத்திப் பிடித்தபடி அதை வக்கீல் நீலமேகத்தின் புறமாக நீட்டியபடியே ''வக்கீல் சார்! உம்ம 'க்ளையண்ட்'டோட சாவ தானமா 'டிஸ்கஸ்' செய்துக்குங்க. இந்தாப்பா, 'சிக்ஸ் நாட் ஸெவன்' வக்கீல் ஐயா இவனை விசாரிச்சுக்கிட்டப்புறம் அவர் வேலை முடிஞ்சதும் இவனை லாக்கப்பிலே தள்ளிப் பூட்டு...நான் வீட்டுக்குப் போயிட்டு வரேன்'' என்று கூறியபடி யாருடைய பதிலையும் எதிர்பாராதபடி வேகமாக வெளியேறினார்.




**வே**ப்ப மரத்துப் பங்களாவுக்குத் திரும்பியதும் சேகர் சொன்னான்: ''மஞ்சுளா, முதல் காரியமாக நாம் இந்தப் பண்ணையைத் துப்புரவாகச் சோதனை போட வேண்டும்.''

''இப்போதே அதை ஆரம்பிக்கலாமே'' என்று ஆமோதித்தாள் மஞ்சுளா.

இருவரும் கிளம்பினார்கள். கோபாலும் பின்தொடர்ந்தான். ''இந்தப் பங்களாவின் ஒவ்வொரு அங்குல இடத்தையும் உன்னிப்பாகச் சோதித்து விடலாம் சேகர்'' என்றாள் மஞ்சுளா. பிரதான பங்களாவுக்குள் கொல்லைப்புறமாக நுழைந்தார்கள், சமையல் அறை கதவு வழியாக. சமையல் காரியங்களை நிர்வகிக்கும் காவேரி ஏராளமான காய்கறிகளின் நடுவே உட்கார்ந்துகொண்டு ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தாள். அவளை அடுத்திருந்த நீண்ட பெரிய மேஜை மீது ஏராளமான அசைவ உணவுப் பொருள்களும் குவித்து வைக்கப்பட்டிருந்தன.

சாப்பாட்டுப் பிரியனான கோபாலுக்கு இந்தக் காட்சிகள் சுவையூட்டின. ''ஏதாவது பெரிய பட்டாளத்துக்குச் சமையல் நடக்கிறதா? இத்தனை பொருள்களா...? டேயப்பா!'' என்று தன் வியப்பை அவனால் வெளிப்படுத்தாதிருக்க முடியவில்லை.

சமையலறை ராணியான காவேரி, கன்னங் குழியச் சிரித்தாள். இளமையில் அந்தச் சிரிப்பு எத்தனை மோகனமாக இருந்திருக்கும் என்பதை ஊகிக்க முடிந்தது. இப்போதே அந்தச் சிரிப்பு சேகரின் விழிகளை விசாலமாக்கியதே. ''பட்டாளத்துப் பசிக்கு இங்கேயிருந்து தானுங்க எல்லாம் போகும். அப்படியொரு காலமிருந்தது. பெரிய ஐயாவோட காரியங்கள் எதுவுமே சின்னதாக இருக்காது. தினசரி ரெண்டாயிரம் பேருக்கு இந்தப் பண்ணையிலேயிருந்து காய்கறிங்க, அசைவ உணவுங்க எல்லாம் சப்ளை செய்துக்கிட்டிருந்தாரே. அது மட்டுமா? அத்தனை பேருக்கும் ஒரு மாசத்துக்கு வேண்டிய பதார்த்தம் ஐஸ் வீட்டுக்குள்ளே அடுக்கி வச்சிருக்கும் ....ம்.... அது ஒரு காலம்'' என்று ஒரு பெரிய பறங்கிக் காயைத் துண்டாடிக் கொண்டிருந்தாள் காவேரி.

மஞ்சுளா சேகருக்குக் காவேரி கூறிய விஷயத்தின் பூரா விவரங்களையும் விளக்கலானாள்.

'' அத்தனைக்கும் ஐயா என்னிடம் தான் பொறுப்பை ஒப்படைப்பாரு'' என்றாள் காவேரி பெருமையுடன். ''இந்தச் சமையல் அறையின் நிர்வாகத்தில் என்னைத் தவிர இந்த முப்பது வருஷத்தில் யாருமே புகுந்ததில்லை, ஒரே ஒரு சந்தர்ப்பத்தைத் தவிர...''

''அது எந்தச் சந்தர்ப்பம் காவேரி?'' என்று கேட்டாள் மஞ்சுளா.

''அதாம்மா. இந்தப் புயல் அடிச்சுதே, அப்போத்தான். சின்னம்மா (கோகிலா) என்னைச் சேதத்தைச் சரிப்படுத்தறவங்களுக்கு உதவியாப் போன்னு சொல்லிட்டு அன்னிப் பூரா தானே சமையல் வேலையைக் கவனிச்சாங்க. எங்களுக்கெல்லாம் கூட அவங்களேதான் ஆக்கிப் பொரிச்சு அனுப்பி வைச்சாங்க. இந்த ஒரு தடவைதான் இந்த ராச்சியம் கைமாறிச்சு. இனியொரு புயல் அப்படி வீசினாத்தான்—ஆண்டவனே அப்படி வீசவும் வேணும்—மறுபடி இந்த ராச்சியம் என் கையை விட்டு மாறவும் வேண்டாம்.''

அவள் பேச்சைக் கேட்டுக் கொண்டே அடுத்த அறைக்குள் புகுந்தார்கள்.



அருமையான நல்ல ஓர் ஊரின் பெயர் தெரியுமா உங்களுக்கு? தெரியாவிட்டால் இப்போ தெரிந்துகொள்ளுங்கள்!
கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள இந்த ஊரே அது. - அருமை நல்லூர்! - ''தமிழ்''

---

அங்கு பெரிய பெரிய அலுமினியக் கொப்பரைகள் அடுக்கப் பட்டிருந்தன. அவைகளில் எல்லாம் பால், வெண்ணெய். பெரிய பெரிய கூடைகளில் வைக்கோல் மெத்தைகளில் முட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. இவை தவிர இறைச்சி வகைகள் ஏராளம். அது ஒரு பெரிய உணவுக் கிடங்கு.

''இப்போது யுத்த காலமில்லாவிட்டாலும் கூட உணவு சப்ளை செய்யும் கான்ட்ராக்ட் எங்கள் பண்ணைக்கு இன்னும் உண்டு'' என்று அத்தனை பொருள்களின் சேகரிப்புக்குக் காரணம் கூறினாள் மஞ்சுளா. அந்த விசாலமான அறையின் மூலையில் ராட்சத அமைப்பில் உள்ள பெரிய பெரிய பெட்டிகளைச் சுட்டிக் காட்டி ''அவைகளெல்லாம் ரெஃப்ரிஜிரேட்டர்கள். நீங்கள் சிறிய அளவில் பார்த்திருப்பீர்கள். இவை பிரும்மாண்டமானவை'' என்று கூறி, அதன் அருகே சென்று ஒரு மின் பொத்தானை அழுத்தினாள். பூதாகாரமான ஒரு பெட்டியின் மூடி தானாகத் திறந்து கொண்டது. ''இந்தக் குளிர் பதனப் பெட்டிகளின் உறைநிலை 'மைனஸ்' பத்திலிருந்து முப்பது வரை கூட இருக்கும். இந்தப் பெட்டிகள் ஒவ்வொன்றும் நானூறு பவுண்டு எடையுள்ள பொருள்களை அடக்கிக்கொள்ளும் தகுதி வாய்ந்தது. ஒரே சமயத்தில் இங்கு மூவாயிரம் பவுண்டு இறைச்சிகளை சேமித்து வைக்க முடியும்'' என்று விளக்கினாள் மஞ்சுளா. கோபாலுக்கு அந்தப் பண்ணையின் மகத்துவம் இப்போது தான் புரிந்தது. ''அடேயப்பா!...''- என்று வாய் விட்டுத் தன் பிரமிப்பை வெளியிட்டான்.

''வெளித் தோற்றத்தைப் பார்த்தால் பழங்காலக் கட்டிடமாகத் தோற்றம் அளித்தாலும் உள்ளே இத்தனை நவீன வசதிகள் இருப்பது அதிசயம் தான்'' என்றான் சேகர். ஆரம்பத்திலிருந்தே அந்த பங்களாவின் அமைப்பு அவனை வெகுவாகக் கவர்ந்திருந்தது.

திடீரென்று சேகர் ஒரு கேள்வி கேட்டான்: ''ஏன் மஞ்சு, உன் சித்தப்பா வீராசாமி திருமணம் செய்து கொண்டவர்தானே?''

''இல்லை... அவர் ஒரு பிரம்மச்சாரி'' என்றாள் மஞ்சுளா.

''நிஜமாகவா? ஏன் அப்படி?''

''ஏனோ. அவருக்குப் பெண்களைக் கண்டாலே பிடிக்காது'' என்று கூறி விட்டுக் கலகலவென்று சிரித்தாள்.

சேகரைச் சிந்தனையில் ஆழ்த்தியது, அவள் கூறிய செய்தி.

பிரதான பங்களாவின் எல்லாப் பகுதிகளையும் பார்த்து முடித்துவிட்டுப் பண்ணையாட்களின் குடியிருப்புக்களுக்கும் விஜயம் செய்து அவர்களை யெல்லாம் தன் காதலனுக்கு அறிமுகப் படுத்தினாள் மஞ்சுளா. பிறகு எல்லாரும் திராட்சைக் கொடி வீட்டின் அருகில் வந்தார்கள். அதைக் காணும்போதே மஞ்சுளாவின் முகம் வாடியது. திராட்சைக் கொடிப் பந்தல் முன்னால் கூடாரமிட்டிருந்தது. கட்டடத்தின் மீதும் கூடப் பற்றிப் படர்ந்து ஓர் அழகையே தந்தது. வெட்டுக் கற்களைக் கொண்டு கட்டப்பட்ட சின்னப் பங்களாவானாலும் அழகாக இருந்தது. புயல் விளைவித்த சேதங்கள் நன்றாகத் தெரிந்தன. கன்னிக்கோட்டை ஓடுகள் பல இடங்களில் ஒட்டுப் போட்ட துணியைப் போல் பலவிதமான பலகை, கூரை, தட்டி, ஆகியவைகளால் மூடி மறைக்கப்பட்டிருந்தன. பிய்த்தெறியப்பட்ட ஜன்னல் கதவுகளை ஒழுங்கு படுத்தக் குறுக்கும் நெடுக்குமாகக் கட்டைகளை வைத்து ஆணி அடித்திருந்தார்கள். அவைகளைத் திறக்க முடியாதபடி.

''யுத்த காலத்திலே இதனுள்ளே இருக்கும் விசாலமான அறைகளில் தான் ஏராளமான உணவுப் பொருள்களைக் குளிர்பதன முறையில் பாதுகாத்து வைத்திருந்தார் தாத்தா. அவருக்கு ரொம்ப அந்தரங்கமான பங்களா இதுதான். இங்குதான் அவர் அநேகமாக இருப்பார். பெரிய பங்களாவுக்கு வரவே மாட்டார். அப்படிப்பட்டவரை விதி கடைசியில் அங்கேயே படுத்த படுக்கையாக்கி விட்டது. இந்தத் திராட்சைக் கொடி வீடு அவர் மேற்பார்வையி லிருந்து போனதுமே அது தன் மதிப்பை இழந்து விட்டது. இந்தப் புயலும் அதன் அழகை அழித்து விட்டது'' என்றாள் மஞ்சுளா. அவள் மனம் அந்தத் திராட்சைக் கொடி வீட்டின் அலங்கோல நிலைக்காக எத்தனை வேதனை அடைந்திருக்கிறது என்பது தெளிவாகத் தெரிந்தது. அதன் உள்ளே போக முடியாதபடி வாசல் படிக்குக் கட்டைகளைக் குறுக்கே கொடுத்து ஆணி அடித்திருந்தார்கள். திராட்சைக் கொடி வீட்டைச் சுற்றி வரலானார்கள் மூவரும். (தொடரும்)

# நினைவில் நின்றவள்

**கஜமுகன்**

"என்ன இந்தப் பெண் சௌந்தரத்தைக் காணவில்லை. குடிக்கிறதுக்குப் பொட்டுத் தண்ணி இல்லை....." என்று அம்மா முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

"எல்லாம் வந்து விடுவாள். வராவிட்டால் என்ன? நீதான் ஒரு நடை போய் எடுத்துக் கொண்டு வாயேன். உடம்புக்கு நல்லது" என்று அப்பா பதில் கொடுத்தார்.

"சரிதான்! குடத்தைப் போட்டுக் கொண்டு எங்கேயாவது விழுந்து கிடந்தால் நன்றாகத்தான் இருக்கும்! உங்களுக்கும் உங்கள் பிள்ளைக்கும் யார் பொங்கிப் போடுவார்கள்?" - தர்க்கம் நடந்து கொண்டிருக்கையிலேயே சௌந்தரம் வந்து விட்டாள்.

"நாழிகை ஆகிவிட்டது, மாமி!"

"அதுதான் தெரிகிறதே!" என்று அம்மா நொடித்துக் கொண்டே குடத்தை அவளிடம் கொடுத்தாள். சௌந்தரம் குடத்தை இடுப்பில் வைத்துத் தனது பொற்கரத்தால் அணைத்தவண்ணம் ஆற்றை நோக்கிப் பறந்தாள். நான் கல்லூரிக்குப் போக ரயிலைப் பிடிக்கப் பறந்து கொண்டிருந்தேன். எட்டு ஐம்பதுக்கு வரும் அந்த வண்டியைப் பிடிக்காவிடில் பகல் பன்னிரண்டு மணிக்கு முன்னால் கல்லூரிக்குப் போய்ச் சேர இயலாது. உடை அணிந்து கொண்டே ஜன்னல் வழியே சௌந்தரம் குடம் தாங்கி ஒயிலாக ஒசிந்து போகும் காட்சியை ரசித்துக் கொண்டிருந்தேன்.

என் வீட்டுக்கு எதிரே ஒன்றரை பர்லாங்கு தூரத்தில் வைகை ஓடியது. வீட்டில் இருந்தவாறே ஆற்றைப் பார்க்கலாம். சௌந்தரம் படித்துறையில் இறங்கி மறைகிற வரை அவளைப் பார்த்துக் கொண்டிருப்பது வழக்கம். ஆற்றில் ஊற்றுப் போட்டுத் தண்ணீர் சேந்தி வரப் பதினைந்து இருபது நிமிடங்கள் ஆகும். அதற்குள் எனக்கு நேரமாகிவிடும்.

முப்பது வருடங்களுக்குமுன் மதுரை அமெரிக்கன் கல்லூரியில் நான் உதவி விரிவுரையாளனாக இருந்தேன். என் தகப்பனார் மதுரைக்குக் கிழக்கே ஒரு கிராமத்தில் போர்ட் பள்ளிக்கூடத்தில் தலைமை ஆசிரியர். நானும் அந்த ஊரிலிருந்துதான் நாள்தோறும் ரயிலில் மதுரைக்குப் போய் வந்தேன். ஊரை ஒட்டி வைகை நதி ஓடியது. வருடத்தில் முக்கால்வாசி நாள் அது மணலாறுதான். அதிலிருந்துதான் என் வீட்டுக்குக் குடி தண்ணீர் வந்தாக வேண்டும்.

என் தாயார் இருக்கிறாளே, அவளுக்கு எழுந்திருந்தால் வியாதி, உட்கார்ந்தால் வியாதி! அப்படியொரு உடல் வாகு! பளுவான எதையும் தூக்கக் கூடாது என்று உள்ளூர் டாக்டர் கட்டளை இட்டிருந்தார். என் தகப்பனாருக்கும் தாயாருக்கும் டாக்டர் சொன்னது வேத வாக்கு. அதனால்தான் தண்ணீர் கொண்டு வருவதற்குச் சௌந்தரத்தை அமர்த்தியிருந்தார்கள். சௌந்தரத்துக்கு வயது பதினெட்டு இருக்கும். அவளுடைய தாயார் சாப்பாட்டுக் கடை வைத்திருந்தாள். சிறு வயதிலேயே தகப்பனாரை இழந்தவள் சௌந்தரம்.

தாயாருக்கு உதவி செய்வதுடன் நாலைந்து வீடுகளுக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்து மாதம் பத்துப் பதினைந்து ரூபாய் சம்பாதித்தாள். பளபளவென்று துலங்கிய பித்தளைக் குடம் போல் சௌந்தரம் மினுமினுப்புடன் இருந்தாள். பெயருக்கேற்ற அழகுடையவள்தான். காதில் பெயருக்கு ஏதோ பொன்னணி போட்டிருந்தாள். மூக்கில் ஒரே ஒரு சிவப்புப் பொட்டு. கழுத்தில் மெல்லியதாக ஒரு பவள மாலை. கைகளில் ரப்பர் வளைகள். இவ்வளவுதான் ஆபரணங்கள். நெற்றியில் அகலமான குங்குமம் துலங்கும்.

சௌந்தரம் உள்ளூரில் எட்டு வகுப்புகள் படித்தாள். மதுரை போய் ஹைஸ்கூலில் படிக்க வேண்டும் என்று ஆசை இருந்தது. அதற்குத் தாயார் அணை போட்டுவிட்டாள்.

எழுதப் படிக்கத் தெரிந்தால் போதும் என்ற மனப்பான்மை இருந்த காலம் அது. வீட்டு வேலைகளில் சௌந்தரத்தைப் பழக்கி ஒரு நல்ல இடமாகப் பார்த்துக் கொடுத்துவிட வேண்டும் என்பது தாயாரின் ஆசை.

சௌந்தரத்தின் தாயார் நேர்மைக்கு ஓர் இலக்கணம். அவளுடைய கைச் சமையலைச் சாப்பிட்டவர்கள் வேறு சாப்பாட்டை நாட மாட்டார்கள். அதனால் அவளுடைய வாடிக்கைக்காரர்களுக்கு அவளிடம் ஒரு தனி மரியாதை உண்டு.

மகள் கலியாணப் பிரச்னைதான் தாயாரை அல்லும் பகலும் வாட்டியது. ஆனால், சௌந்தரமோ மண வாழ்வைப் பற்றிக் கனவுகூடக் காணவில்லை. வயது பதினெட்டை எட்டி எழில் குலுங்கும் பருவப் பெண்ணாகத் திகழ்ந்த போதிலும் மணம் செய்து கொள்வதில் நாட்டமற்று இருந்தாள். கல்வி அறிவு பெற்று நாட்டுக்கும் மக்களுக்கும் பயனுள்ள வகையில் பணியாற்ற வேண்டும் என்ற ஒரு துடிப்பு அவள் உள்ளத்தில் உதயமாயிருந்தது. அதற்கு எப்படித் தனக்கு வாய்ப்பு கிடைக்குமென்று சிந்தித்துக் கொண்டிருந்தாள். இந்தச் சமயத்தில்தான் நாங்கள் அந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தோம். சில மாதங்களுக்குப் பிறகுதான் சௌந்தரம் தண்ணீர் கொண்டு வர அமர்த்தப்பட்டாள். சௌந்தரத்தை முதல் நாள் பார்த்ததுமே என் மனத்தில் ஒரு புயல் எழுந்துவிட்டது. இப்படி ஓர் அழகுத் தேவதை இந்தக் கிராமத்தில் வந்து ஒளிந்து கொண்டிருக்கிறதே என்று நினைத்துப் பரவசமடைந்தேன்.

என் தந்தைக்கு அந்தப் பெண்ணை மிகவும் பிடித்திருந்தது. பள்ளித் தலைமை ஆசிரியர் என்ற முறையில் அவருக்கு ஒரு தனி கௌரவம் இருந்தது. அதனால்தான் சௌந்தரம் வீட்டுக்குத் தண்ணீர் கொண்டு வரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டாள். என்

தாயார் மட்டும் அவளை ஒரு வேலைக்காரப் பெண்ணைப் போல் நினைத்துப் பேசுவாள். என் தாயாருக்குப் பிறந்த வீட்டுச் செல்வாக்கு கொஞ்சம் உண்டு.

சௌந்தரத்தின் குடும்பத்தைப் பற்றி நான் அறிந்த பிறகு அவளிடம் தனி மரியாதை வைத்து வரலானேன். அவளுடன் பேச வேண்டுமென்று மனம் அடித்துக் கொள்ளும். ஆனால் கூச்சம் குறுக்கிட்டுப் பேச வொட்டாமல் செய்துவிடும். அன்றாடம் அவள் குடத்தை எடுத்துக் கொண்டு ஆற்றுக்குப் போவதைப் பார்த்து ரஸிப்பதுடன் என் ஆவல் நின்று விடும். அவள் வந்துவிட்டுப் போன பிறகு அவள் உருவம் என் மனத்தை விட்டு வெகு நேரம் அகலுவதில்லை.

எனக்குக் கல்லூரி விடுமுறை வந்தது. அப்பாவும் கோடை விடுமுறைக்கு அம்மாவின் ஊருக்குப் போகலாம் என்று திட்டம் போட்டிருந்தார்.

இதனால் சௌந்தரத்தை இரண்டு மாதங்கள் பார்க்க முடியாதே என்று நினைத்தேன். இது வரை இருவரும் நேரில் பேசிக் கொள்ளாமல் மௌன நாடகம் நடந்தது. அப்பாவுடனும் அம்மாவுடனும் ஊருக்குப் போகாமல் விடுமுறைக்கு அந்த ஊரிலேயே தங்கி விட்டால், சாப்பாட்டைச் சௌந்தரத்தின் வீட்டில் வைத்துக் கொண்டு விடலாம். அப்போது அவளுடன் பேசுவதற்கு வாய்ப்புக் கிடைத்து விடுமல்லவா?

அப்பாவுக்கு விடுமுறை வந்தது. நான் அம்மாவிடம் சொன்னேன்: ''அம்மா, நான் இந்த லீவில் கொஞ்சம் ஆராய்ச்சி பண்ணலாம்னு பார்க்கிறேன். அதனால் நீங்கள் இரண்டு பேரும் மட்டும் ஊருக்குப் போய் வாருங்கள்.''

''என்னடா பெரிய ஆராய்ச்சி! சாப்பாட்டுக்குத் திண்டாடிண்டு....''

''என்னம்மா, பெரிய திண்டாட்டம்? அப்பாவுக்கு லீவு ஒரு மாசம் தானே. ஹோட்டல்லே சாப்பிட்டுக் கொள்கிறேன். இல்லாவிட்டால் எடுப்புச் சாப்பாடு வரவழைத்துக் கொள்கிறேன்.....''

''சரி சரி, உங்கப்பாவைக் கேள்....''

''நீ சொன்னால் அப்பீல் ஏதம்மா ?''

''சரிதாண்டா போ!''

அப்பா மறுப்பு ஏதும் சொல்லவில்லை. நான் ஊரிலேயே தங்கினேன். அம்மாவே சௌந்தரத்தின் தாயாரை வரவழைத்து எனக்குச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்துவிட்டாள். அவர்கள் வீட்டுக்கே போய்ச் சாப்பிடும்படியும் சொன்னாள். என் மனோரதம் நிறைவு பெற்றது.

சாப்பிடப் போகும் போது சௌந்தரம் கண்ணில் படுவாள். ஆனால் உணவு பரிமாறவோ, வேறு எதுவும் தேவையா என்று வினவவோ வரமாட்டாள்.

நான் எதிர்பார்த்த வாய்ப்பு பத்து நாட்கள் வரையில் கிடைக்கவில்லை. அந்த வாய்ப்பு வந்த போதோ துயர வடிவில் வந்தது.

ஒரு நாள் திடீரென்று சௌந்தரம் என்னிடம் ஓடி வந்து நின்றாள். பேச வகையறியாது கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தாள் அவள்.

''என்னம்மா ?''

''ஸார்.... என் அம்மாவுக்கு என்னவோ தெரியல்லே ஸார்....''

அவள் மேலே பேசவில்லை. நான் அவளுடன் ஓடினேன். போகிற வழியில் உள்ளூர் டாக்டரையும் அழைத்துக் கொண்டு போனேன்.

அவளுடைய தாயார் ரத்த அழுத்தம் அதிகமாகி மயங்கிக் கிடந்தாள். டாக்டர் தமக்குத் தெரிந்த வைத்தியத்தைச் செய்தார். ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லிப் போனார்.

சாப்பாட்டுக் கடைப் பொறுப்பு சௌந்தரத்தின் தலையில் விழுந்தது. அவள் அதற்



காகக் கவனிக்கவில்லை. தாயாருக்கு மேல் பன்மடங்கு திறமையுடன் நிர்வகித்தாள். ஆனால் சாப்பாட்டுக்கு வருவோரின் கண்கள் தாம் அவளைச் சரியானபடி நோக்கவில்லை. மகளை மறைத்து மறைத்துப் பாதுகாத்து வந்த திரை சற்று விலகியதும் விஷக் கண்களின் பார்வை அவளைத் தகித்தது. நான் அவளுடன் பேச வேண்டிய சந்தர்ப்பம் அதிகரித்தது. எங்கள் பரிச்சயம் சரளமாகியது. அவளுடன் பேசவேண்டும் என்றிருந்த துடிப்பு நீங்கி, அவளை எப்படிப் பாதுகாப்பது. உலகத்தின் ஏச்சுக்கு இடமில்லாமல் எப்படி நடந்து கொள்வது என்பது பிரச்னையாகி விட்டது.



"நீந்தத் தெரியும்; ஆனால் என் ஜாதகப்படி நீர்கண்டம் இருக்கிறதே அதனால்தான் தயங்குகிறேன்."

"உங்களுக்கு என்னிடம் ஒரு கவர்ச்சியும் அன்பும் ஏற்பட்டதே என் உருவம் தான் என்பது தெரியும் ஸார்..... இந்த அழகு எனக்குச் சத்துருதான்.... ஒரு பாதுகாப்பு தேவை தான்,.... ஆனால் எனக்கு மண வாழ்க்கையில் நாட்டமில்லை. படிக்க வேண்டும். நாட்டுக்குப் பணி செய்ய வேண்டும். உங்களைப்போல் ஆசிரியையாக ஆகி என்னைற்ற ஏழைப் பெண்களுக்கு எழுத்தறிவித்து மகிழ வேண்டும். அவர்கள் அறியாமை இருளைப் போக்க வேண்டும் என்ற தவிப்பும் தாகமும் என் உள்ளத்தில் அடங்காமல் இருக்கின்றன. உங்களுக்கு உண்மையிலேயே என் மீது மனப்பூர்வமான அன்பு இருக்குமாயின் இந்த அறிவுப் பசி தீர உதவி செய்யுங்கள். உங்களை நான் தெய்வமாகத் தொழுவேன்....."

சௌந்தரத்தின் தாயோ வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தாள். சௌந்தரம் உலகைப் பற்றிக் கவலைப்படவில்லை. தன் தாயார் நல்லபடியாக உடல் தேறி மீண்டும் நடமாட வேண்டும் என்பதே அவள் கவலை. ஆனால் அவள் கவலையை நீடிக்கும்படியாகத் தான் காரியங்கள் நடந்தன. அவள் தாயாரின் உடல் நிலை மேலும் மோசமாகியது. "மதுரைக்கு அழைத்துப் போய் விடுங்கள்" என்று டாக்டர் சொல்லி விட்டார்.

சௌந்தரம் என் உதவியைத்தான் நாடினாள். அவளையும் அவள் தாயாரையும் மதுரைக்கு அழைத்துப் போனேன். தாயாரை ஆஸ்பத்திரியில் சேர்த்தேன். சௌந்தரமும் அங்கேயே தங்கினாள்.

ஆனால் சௌந்தரத்தின் தாயாரை அந்த ஆஸ்பத்திரி வைத்தியர்களும் காப்பாற்ற முடியவில்லை. மகளுக்கு ஒரு வழி செய்யாமலேயே அவள் போய் விட்டாள்!

"சௌந்தரம், இனி என்ன செய்யப் போகிறாய்?"

"எனக்கு விடுதலை கிடைத்து விட்டது, ஸார்......."

"என்ன சொல்கிறாய் நீ?"

"அறியாமை இருள் விலக வழி கிடைத்து விட்டது. என்னை ஒரு மகளிர் இல்லத்தில் சேர்த்து விடுங்கள். நான் படிப்பைத் தொடர்ந்து என் வாழ்வுக்கு வழி வகுத்துக் கொள்கிறேன்."

"உன் தாயார் உன்னை நிராதரவாக விட்டு விட்டாள் என்பதற்காக இப்படிக் கேட்கிறாயா? உன்னை ஏற்று, வாழ வைக்க யாராவது தயாராய் இருந்தால்...?"

"என் மனம் அந்த வாழ்வை நாடவில்லை."

"உன்னை நீ கண்ணாடியில் பார்த்துக் கொள்வதுண்டா சௌந்தரம்?"

"என்னுடைய அழகைப் பற்றித்தானே சொல்கிறீர்கள்....."

"ஆமாம், சௌந்தரம்....."

சௌந்தரம் என் முன் ஓர் இலட்சியப் பெண்ணாகத் தோன்றினாள். அவள் மீது நான் வைத்த மதிப்பு இன்னும் பன்மடங்கு பெருகியது. அவளை மகளிர் இல்லம் ஒன்றில் சேர்த்துவிட்டு, அவளுடைய தொடர்பை ஓர் இனிய கனவாக அசைபோட்டு வந்தேன்.

விடுமுறை முடிந்து என் பெற்றோர்கள் திரும்பினார்கள். சௌந்தரத்துக்கு நேர்ந்த கதியைக் கேட்டதும் என் தாயார் கதறியே விட்டாள். "அட பாவிப் பெண்ணே! உன்னைப் பற்றி நான் என்னென்னவோ கோட்டை கட்டினேன்...." என்று புலம்பினாள். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"என்னம்மா சொல்லுகிறாய்....?"

"அட, அசட்டுப் பையா! நீ கல்லூரியில் லெக்சரராய் இருந்தால் என்னடா, ஒரு தாய்க்கு ஒரு மகனின் மனம் தெரியாதா? உனக்கு அந்தக் குட்டி மேல் நாட்டம் விழுந்ததை நான் அறிவேனடா. நீ ஊருக்கு வராமல் சதித் திட்டம் தீட்டியதும் எனக்குத் தெரியும். நான் ஊருக்குப் போய்வந்தபின் கல்யாணத்தை நிச்சயம் செய்வதாக சௌந்தரத்தின் அம்மாவிடம் சொல்லிவிட்டுப் போனேனடா! அந்தப் பாவி இப்படிச் செய்துவிட்டாளே! போடா, போய் அந்தப் பெண்ணை அழைத்து வா."

அம்மாவா இப்படிப் பேசுகிறாள்? நான் வியந்துப் போனேன். கூலிக்குத் தண்ணீர் சுமந்த பெண்ணைத் தன் மருமகளாக்கிக் கொள்ளத் துடிக்கிறாளா? இது என்ன விந்தை மிஞ்சும் விந்தை!

"அம்மா, நீ நிஜமாகத்தான் சொல்கிறாயா?"

"ஆமாம்டா! இதில் உனக்கு என்ன சந்தேகம்? சௌந்தரம் மாதிரி ஒரு பெண்



"பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்...!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களை-யும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் ஏராளமான நுரை பல் இடுக்கு களில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் [illegible] நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!







ஸ். ஓ. 12 TM

கிடைக்கக் கோடி தவம் செய்ய வேண்டுமடா! என்ன அழகு.... என்ன அடக்கம் !''

''காலம் கடந்த புகழுரை அம்மா !''

''ஏண்டா ?''

''தனக்கு மண வாழ்க்கையில் இஷ்டமில்லை என்று சொல்லி விட்டாளம்மா.''

''இப்போது வேண்டாம் என்று சொல்லி இருப்பாள். அவளுக்குப் படிக்க வேண்டும் என்று ஒரே வெறி. படிப்பு முடிந்ததும் கல்யாணம் செய்து கொள்வாள்....''

''நான் எத்தனை வருடங்களானாலும் காத்திருக்கத் தயார் அம்மா. ஆனால் அவளுக்கு அந்த எண்ணமே இல்லையே !''

''அவள் எனக்குப் பயந்து கொண்டு சொல்லியிருப்பாள். என்னை அழைத்துக் கொண்டு போ. நான் கேட்கிறேன்....''

''வேண்டாம் அம்மா. அவள் லட்சியத்துக்கு நாம் குறுக்கே நிற்க வேண்டாம். அவள் ஒரு தேச பக்தரின் மகள். அந்தப் பொறி அவளிடம் சுடர் விடட்டும். காலம் என்ன செய்கிறது, பார்க்கலாம்.....''

காலம் ஓடிவிட்டது. சௌந்தரத்தின் மனம் மாறவில்லை. எங்கோ நாட்டு மக்களின் துயர் துடைக்கும் பணியில் அவள் ஈடுபட்டிருக்கிறாள். நானோ....?

---

# கருச்சிதைவா; சிசுஹத்தியா?

**புதுதில்லி, மே 27ந் தேதி:** செயற்கை முறையில் கருச்சிதைவு செய்து கொள்ள அனுமதிக்கும் வகையில் சட்டம் கொண்டு வந்து நாடாளுமன்றத்தில் நிறைவேற்றியிருக்கிறது அரசு. ஜனசங்கம், சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் மட்டுமே இதை எதிர்த்தனர். சுகாதார மந்திரி டி. பி. சட்டோபாத்தியாயா இச்சட்டம் பெண்களின் புனர்வாழ்வுக்காகக் கொண்டு வரப்பட்டது என்றும் குடும்பக் கட்டுப்பாடு இதன் நோக்கமல்ல என்றும் சொன்னார்! ஆனால் குடும்பக் கட்டுப்பாட்டுக்கும் இது உதவலாம் என்றும் குறிப்பிட்டார்!!

இனி செயற்கை முறையில் கருச்சிதைவு செய்து கொள்வது பற்றி ''ஏர்போர்ட்'' என்ற தமது நாவலில் ஆர்தர் ஹெய்லி எழுதுவதைப் படியுங்கள். விமான ஓட்டிகளாக இரு நண்பர்கள் பேசிக் கொள்கிறார்கள்:

ஹாரிஸ்: இந் நாட்களில் தூக்குத் தண்டனை விதிக்கக் கூடாது என்று சிலர் வாதாடுகிறார்கள். ஆயின் அதே சமயத்தில் செயற்கை முறையில் கருச்சிதைவு நடப்பதை அனுமதிக்க வேண்டும் என்கிறார்கள். ஒரு பக்கம் மனித உயிரின் மதிப்பைப் பெருக்கிக் கொண்டே போகும்போது மற்றொரு பக்கம் மனித உயிரின் மதிப்பைத் தாழ்த்துகிறார்கள். இதிலுள்ள பொருத்தமின்மை அவர்களுக்குப் புரியவில்லையே !

டெமெரெஸ்ட்: பிறக்காத ஒரு குழந்தைக்கு உயிர் இல்லை. அதாவது தனக்கென்று தனி உயிர் அதற்குக் கிடையாது. கரு ஒரு மனிதனாகாது.

ஹாரிஸ்: செயற்கை முறையில் ஒரு குறைப் பிரசவம் ஆனபின் அந்தக் குழந்தையை நீ பார்த்திருக்கிறாயா ?

டெமெரெஸ்ட்: இல்லை.

ஹாரிஸ்: நான் ஒரு தடவை பார்த்தேன். எனக்குத் தெரிந்த ஒரு டாக்டர் காட்டினார். அது ஒரு கண்ணாடி ஜாடியில் இருந்தது. பார்மால்டிஹைடில் மூழ்கிக் கிடந்தது. என் நண்பர் அதை ஓர் அலமாரியில் வைத்திருந்தார். அவர் சொன்னார், அந்தக் குழந்தை உயிருடன் இருந்திருந்தால் ஆரோக்கியமான ஆண் மகவாகப் பிறந்திருக்கும் என்று. அது ஒரு கருதான், நீ சொன்னது போல. ஆனால் அது ஒரு மானிட ஜீவனாகும் கூட. எல்லா அவயவங்களும் அதற்குக் கச்சிதமாய் அமைந்திருந்தன. அழகான முகம், கரங்கள், கால்கள், விரல்கள் ....ஆண் குறிகூட இருந்தது. அதைப் பார்க்கும்போது எனக்கு எப்படி இருந்தது தெரியுமா? நான் வெட்கப்பட்டேன்! 'கருக்காப்பு நடவடிக்கை எடுத்துக் கொள்ளத் தெரியாத இருவர் சிறு குழந்தை கொலை செய்யப்பட்டபோது நானெங்கே தொலைந்து போனேன்? ரொம்ப நேர்மையானவர்கள், உணர்ச்சி மிக்கவர்கள் என்று தங்களைப் பற்றிச் சொல்லிக் கொள்கிற பேர்வழிகளெல்லாம் அந்தச் சமயத்தில் எங்கே தொலைந்து போனார்கள்? ஏன் இந்தக் கொலையைத் தடுக்க யாருமே முன்வரவில்லை?' என்று தோன்றியது. ஆம், நடந்தது கொலைதான்; அந்த வார்த்தையைப் பயன்படுத்த இது போன்ற சந்தர்ப்பங்களில் நாம் பயப்பட்டாலும்கூட, உண்மை அது தான் !

டெமெரெஸ்ட்: அட கஷ்டமே! அந்த அளவுக்கு வளர்ச்சியுற்ற பிறகு ஒரு குழந்தையை வெளியே எடுப்பார்களா? நான் அதைச் சொல்லவில்லை......

ஹாரிஸ்: உனக்குத் தெரியுமா?... எட்டு வார வளர்ச்சியிலேயே ஒரு கருவுக்கு, முழு வளர்ச்சியுற்ற குழந்தையின் எல்லா அவயவங்களும் அமைந்து விடுகின்றன. மூன்றாவது மாதத்தில் கரு பார்ப்பதற்கும் குழந்தையைப் போலவே இருக்கிறது. ஆக எந்த கட்டத்தில் செயற்கைக் கருச்சிதைவைக் கொலை யல்ல என்று நீ முடிவு கட்டுவாய்?



ஒரு பக்கம் செயற்கைக் கருச்சிதைவை ஊக்கும் வகையில் சட்டங்கள் இயற்றப்படுகின்றன; மற்றொரு பக்கம் குறைப் பிரசவத்தில் பிறந்த குழந்தைகளின் உயிர் காக்க மருத்துவ உலகம் அரும்பாடுபடுகிறது ! படத்தில் சிசு பிராணவாயுக் கூடாரத்தினுள் இருக்கிறது. அது மூச்சுவிட சிரமப்பட்டால் உடனே அருகிலுள்ள கருவி அதை உணர்த்தும். குழந்தையை இரவு பகலாய்க் கண்காணிக்கும் நர்ஸ்கள் நோய்க் கிருமிகள் அதனை அணுகவிடக் கூடாதென்பதற்காக முகமூடி தரித்திருப்பார்கள். யு.பி.எஸ்.

## படிக்காதே!

சுங்க அதிகாரிகள் விழுந்துவிழுந்து படிக்கிறார்கள், தென் ஆப்பிரிக்காவில். இதுவரை 15,000 புத்தகங்களுக்குத் தடை விதித்திருக்கிறார்கள். மனிதருக்கு மனிதர் உடல் வண்ணத்தால் வேறுபாடு காணும் இந்த நாட்டில், கிறிஸ்தவ மதப் பிரசாரப் புத்தகங்களுக்குக்கூடத் தடை. அவற்றி லெல்லாம் அங்கங்கே, "உலக சகோதரத்துவம்", "மனிதர் யாவரும் சமம்" என்ற சொற்கள் வருகின்றனவே!

தடையாகும் புத்தகங்கள் பிளாக் மார்க்கெட்டில் எக்கச் சக்கமான விலை போகின்றன. சொல்லப் போனால் கள்ளச் சந்தையில் புத்தகங்கள் லட்சக் கணக்கில் விற்பனை யாகின்றன.

டைம்ஸ் ஆப் இந்தியா - டி.எஸ்.வி.

## இடக்கரடக்கல்!

"இடக்கரடக்கல்" என்றால் என்ன அர்த்தம்?"

"எனக்கு வேலை கிடைக்காது என்று அர்த்தம்?"

முத்து

## பார்வை பழுதாகுமா?

எதிர்காலத்தில் கண் பார்வை பழுதாகுமா என்பதை முன்கூட்டியே சோதித்து அறிந்துகொள்ளும் ஒரு கருவி பிரிட்டனில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

45 வயதுக்கு மேல் பலருக்குக் கண் பார்வை சரியாக இல்லாமல்போய், நாளடைவில் பார்வையையே இழந்து விடுகிறார்கள்.

இப்படிப் பார்வை இழந்து போவதற்குக் கண்ணில் ஏற்படும் "கிளா கோமா" என்ற ஒரு வகை நோய் முக்கிய காரணம் என்று கண்டுள்ளனர். அந்த நோய் ஏற்பட்டு, பார்வை மங்கிய பிறகு சிகிச்சை செய்து கொள்வது சிலருக்குப் பலனளிப்பதில்லை. நோய் வருவதற்கான அறிகுறியை ஆரம்பத்திலேயே சோதனை மூலம் அறிந்து அதற்கான சிகிச்சை எடுத்துக் கொள்வதன் மூலம் பார்வை இழப்பதைத் தடுக்க முடிகிறது.

நோய் பற்றி முன் கூட்டியே அறிந்து கொள்ள உதவும் மின்சாரக் கருவி ஒன்று (டோனோ மீட்டர்) பிரிட்டனில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கருவியில் மூன்றரை அங்குல நீளத்துக்கு 'விரல்' ஒன்று உண்டு. அதனை விழிக் கோளத்தில் வைத்தால் அதற்குப் பின்னணியில் உள்ள அழுத்தம் பற்றிய விவரங்களைப் பதிவு செய்து கொண்டு விடுகிறது. எளிதாகச் சோதனை செய்ய முடிவதுடன் எவ்வளவு முறை வேண்டுமானாலும் பரிசோதிக்கலாம். விழிகளை இது சிறிதுகூடப் பாதிப்பதில்லை.

இந்தக் கருவி பற்றியும் அதன் உபயோகங்கள் பற்றியும் லண்டன் மாநகரில் உள்ள பார்வை இழந்தவர்களுக்கான ராயல் சொஸைட்டி விளக்கியிருக்கிறது.

- பி.ஐ.எஸ்.

## "சாலை ஒரு ரோடு!"

'சாலை' என்றால் ரோடு. 'ரோடு' என்றால் சாலை. திருச்சியில் மெயின் கார்டு கேட்டையும் உறையூரையும் இணைக்கும் பாதையின் பெயர் சாலை ரோடு!

— க. வெ. ரா. மோகன்

## பெண்ணின் பெருமை

"எல்லாவிதத்திலும் பெண்கள்தாம் ஆண்களைவிட உயர்ந்தவர்கள். சற்று யோசித்துப் பார்த்தால் இது நன்கு விளங்கும். 'வீட்டுக்கு வந்த வரலக்ஷ்மி' என்று புதிதாக வரும் மருமகளை வரவேற்கிறோம். ஆனால் புதிதாக வரும் மாப்பிள்ளையை 'வீட்டுக்கு வந்த மகாவிஷ்ணு' என்று கூறுவதில்லை. உடை விஷயத்தில் ஆண்களுக்கு நான்கு முழம் போதும். "உடுப்பது நான்கு முழம்" என்பது அவ்வையார் வாக்கு. ஆனால் பெண்களின் உடை பதினெட்டு முழம். அல்லது நாகரீக வழக்கப்படி ஆறு கெஜம். தெய்வீகக் கல்யாணங்களை எடுத்துக்கொண்டு பெண்களின் பெருமையைச் சிந்தித்துப் பார்த்தால் அதுவும் அவர்களுக்குச் சாதகமாகத்தான் இருக்கிறது. சீதா கல்யாணம், வள்ளி கல்யாணம், பார்வதி கல்யாணம் என்று சொல்லுகிறோமே அல்லாமல், ராமன் கல்யாணம், பரமசிவன் கல்யாணம், முருகன் கல்யாணம் என்று சொல்லுகிறதில்லை. இன்னும் பார்ப்போம். சிவனுக்கு ஒரு ராத்திரி -- அது சிவராத்திரி. ஆனால் அம்பாளுக்கு நவராத்திரி."

சொற்பொழிவில் கூறியவர்: வாரியார் தகவல்: விஜயன்




(எழுத்தாளர் பஞ்சாமிர்தத்தின் வீடு. நாலில் வலது உள்ளங் கையைக் குழித்து வைத்துக் கொண்டு உட்பக்கம் பார்த்துக் கூப்பாடு போடுகிறார்.)

பஞ்சாமிர்தம்: ஏய்! பெரிய நாயகி! தலைக்குத் தடவிக்க ஹேர் ஆயில் கேட்டுக் கொண்டே இருக்கிறேன். கோர்ட் சேவகன் மாதிரி மூணு தடவை கூப்பாடு போட்டாச்சு!.... அலமாரியிலிருந்த ஹேர் ஆயில் பாட்டிலைக் காணோம்!

(பஞ்சாமிர்தத்தின் பையன் ராஜு வெளியிலிருந்து வருகிறான்.)

ராஜு: என்னப்பா, இது! பெருமாள் கோயிலிலே தீர்த்தம் வாங்கறவா நிற்கிற மாதிரி நிற்கிறீர்கள்?

பஞ்சாமிர்தம்: இது பெருமாள் கோயில் இல்லேடா! பெரிய நாயகி கோயில்! ஹேர் ஆயில் பிரசாதத்துக்காக நிற்கிறேன்.

(கையில் ஒரு மண் அகலை எடுத்துக் கொண்டு பெரியநாயகி வருகிறாள்.)

பெரியநாயகி: கையை நீட்டுங்கோ! ஹேர் ஆயில் கொண்டு வந்திருக்கிறேன்.

பஞ்சாமிர்தம்: இதென்ன கூத்து! பட்டப் பகலிலே விளக்கேற்றக் கிளம்பிட்டே! கார்த்திகை மாசம்கூட இல்லேயே?... நான் கூந்தல் தைலம் கேட்டேன்! கொளுத்த விளக்கு என்னனை கேட்கலே!

பெரியநாயகி (ராஜுவைப் பார்த்து): சொல்லேண்டா! வாயிலே என்ன கொழுக்கட்டையா?

ராஜு: அப்பா! சமீப காலமா பட்ஜெட் பட்ஜெட்னு ஒரு வார்த்தை அடிபடறது, இல்லையா?

பஞ்சாமிர்தம்: வந்துட்டான்டா, பெரிய பிரசங்க சிரோமணி! பீர்க்கங்காய்ப் பிஞ்சு! எனக்குப் பட்ஜெட்டைப் பற்றிச் சொல்ல....

ராஜு: உங்களுக்குத்தான் அவசியம் சொல்லியாகணும்! நீங்க விவரமா படிச்சிருந்தா உங்களுக்கு இந்த அகல் விளக்குத் தத்துவம் புரிஞ்சிருக்கும்! நீங்க தலைப்பை மட்டும் படிச்சிட்டு, பேப்பரிலே சுவாரசியமாக ஆக்ஸிடெண்ட் நியூஸுக்குத் தாவி இருப்பீர்கள். ஆனால் பெரிய ஆக்ஸிடெண்ட் பட்ஜெட்டிலேயே இருக்குன்னு உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லே. ஹேர் ஆயிலுக்கு அதிக வரி. அதை வைக்கிற பாட்டில் பண்ற கண்ணாடிக்கு வரி. அந்தப் பாட்டிலை மூடற தகர மூடிக்கு வரி. இனிமே நம்மாலே ஹேர் ஆயில் வாங்க முடியுமா?... அசல் தேங்காய் எண்ணெய்! அதையும் வேஸ்ட் ஆகாமல் அப்போ அப்போ அம்மா சின்ன விளக்குச் சட்டியில் ஊற்றிக் கொடுப்பாள்.

பஞ்சாமிர்தம்: நாசமாப் போச்சப்போ! என்னவோ பணக்காரங்க தலையிலேதான் அரசாங்கம் கை வைக்கும்னு சொல்லுவா! இப்போ நம்ம தலையிலேயும் கை வைச்சுட்டதா....?

ராஜு: நீங்க ஒண்ணு! பணக்காரா தலையிலே கையை வச்சு வச்சு எல்லோர் தலையும் சொட்டையாயிடுத்து! வருஷா வருஷம் அரசாங்கத்துக்குக் கை வைக்கத் தலைகள் வேண்டாமா?....

பஞ்சாமிர்தம்: இது சொட்டைத் தலை சோஷலிஸமா? அரசாங்கம் என்ன பஸ்மாசுரனா?

ராஜு: அப்பா புரிஞ்சுக்குங்க! தேய்க்கிறவன் சோஷலிஸ்ட்! தேய்க்கிறவன், காப்பிடலிஸ்ட்!

பஞ்சாமிர்தம்: என்னடா புதுப் பொருளாதார விளக்கம்?

ராஜு: அம்மா! இந்த விஷயத்தை நீ விளக்கு.

பெரியநாயகி: இதோ பாருங்கோ! இனிமே ஸ்நான ரூமிலே அரப்புப் பொடி டப்பாதான் இருக்கும். மேலே தேய்க்கிற சோப் கிடையாது. வரி போட்டாச்சு. விலை உயர்ந்தாச்சு. அவசியமா, எதையாவது மேலே தேய்த்துக் கொள்ள வேண்டும் போல இருந்தால் துணிக்குப் போடற சோப் தரேன். அதற்கு வரி உயரலே!

பஞ்சாமிர்தம்: இப்போ சத்தியமா இங்கே என் மதிப்பு இறங்கிப் போச்சு! நான் கந்தல் துணியாயிட்டேன்.

ராஜு: 'காமன் மான்' (Common man) பட்ஜெட்டோ இல்லியோ? அப்படித்தான் இருக்கும்! இன்னொரு விஷயம்! இனிமே ஜம்பமா டாக்ஸியிலே பழைய ரேட் ஞாபகத்திலே ஏறிப் போயிட்டு, சில்லறை கொடுக்கிற போது விழிக்காதேயுங்கோ! பெட்ரோலுக்கு அதிக வரி! டாக்ஸிக்காரன் நம்ப பணத்தைத் தான் உரிப்பான்! கொஞ்சம் நீங்க நடந்தே பழகலாம்! இத்தனை நாளாக இரண்டு ரூபாய் தூரத்தில் இருந்த இடங்களெல்லாம் மூணு ரூபாய் தூரத்துக்குத் தள்ளிப் போய் உட்கார்ந்து கொண்டு விட்டன.

பஞ்சாமிர்தம்: அட ராமசந்திரா! நல்ல நாளிலேயே இந்த ஊரிலே டாக்ஸிக்காரனைப் பார்த்துப் பயப்பட வேண்டும்! இனிமே



நடுங்கணும்! பெரிய நாயகி! அந்த மண் சட்டியை இப்படி வைக்கட்டு. டிபனுக்கு ஏதாவது ரொட்டித் துண்டு இருந்தால் எடுத்து வா! வயிறு இந்தப் பட்ஜெட் சமாசாரங்களைக் கேட்டப்புறம் கொஞ்சம் கடபுடாங்கிறது.

பெரியநாயகி: ரொட்டியா......? அது பணக்காரா விவகாரம்னு யாரோ மந்திரி சொல்லி அதன் மதிப்பை உயர்த்திப்பிட்டா! மைதா மாவுக்கு இனிமே வரியாம்! ரொட்டி விலை ஏறிப் போச்சு! நான் வாங்கலே.

ராஜு: ஆமாம், அப்பா! உங்க அபிமான ரவா மைதா தோசையெல்லாம் வீட்டிலே கிடைக்காது. 'பிரெட்' இப்போ 'பிரஸ்டிஜ்' சரக்கு! முன் போல இப்போ நம்மாலே வாங்கிக் கட்டாது.

பஞ்சாமிர்தம்: அந்த நாளிலே பிரகலாதன் தன் அப்பன்கிட்டே 'என் நாராயணன் தூணிலும் இருக்கான், துரும்பிலும் இருக்கான்னு' சொன்னானாம். அது மாதிரி இப்போ தூணுக்கும் வரி துரும்புக்கும்வரின்னு ஆரம்பிக்கட்டா! எந்தப் பிரகலாதன்டா. நிதி இலாக்காவுக்கு யோசனை சொன்னான்? நிதிமந்திரிக்கு கற்பூரம் சுற்றி திருஷ்டி கழிக்கணும்டா!

ராஜு: அப்பா.....! தொலஞ்டான்!..... நீங்க இலேசா கற்பூரம்னு சொல்லிட்டீங்க! இப்போ கற்பூரமும் கனமாயிடுத்துன்னேன்! பத்து சதவிகிதம் வரி ஜாஸ்தி! கோவில்களிலே இனிமே கற்பூரத்துக்குப் பதிலா, வெறும் கைவிளக்கையே எடுத்துக் காண்பிச்சாலும் ஆச்சரியமில்லே!.... இன்னொரு விஷயம். உங்க பிரகலாதன் தான் துரும்புன்னுதான் சொன்னான். இன்று மாடர்ன் பிரகலாதன் துணி இரும்புன்னு சொல்றான். துணிக்கு வரி ஜாஸ்தி! இறக்குமதி இயந்திரங்களுக்கு வரி ஜாஸ்தி! நான் ஆசையா வாங்கிப் போட்டுக் கொள்ளும் 'இண்டிபெண்டெண்ட்' ரெடிமேட் ஷர்ட்டுகளின் ஆசையை நான் தியாகம் பண்ணிட்டேன். அவை மேலும் வரி.

பஞ்சாமிர்தம்: நாம் ஜனநாயக நாட்டிலே வாழ்கிறோமா அல்லது வரி நாயக நாட்டில் வாழ்கிறோமடா?

பெரியநாயகி: உட்கார்ந்தா வரி, ஓடினால் வரி, பறந்தால் வரின்னு என்னவோ சொல்லிக் கொண்டிருந்தாயேடா!

ராஜு: வீடு கட்டறவா 'மொசெய்க்' தரைக்கு ஆசைப் பட்டா அதிக வரி. அப்படிப் போட்டு உட்கார்ந்தா வேதனை தான் ஜாஸ்தி! டாக்ஸி ஓடினால் சார்ஜ் ஜாஸ்தி. இதைத் தவிர வெளிநாடுகளுக்கு விமானத்திலே போறவா இருபது சத விகிதமோ என்னவோ அதிகமாக் கொடுத்தாக வேண்டும்! அதைத்தான் சொன்னேன்! இந்த விமானப் பிரயாணிகளிலே பாதிப் பேர் அரசாங்கத்தைச் சேர்ந்தவா! அதிக சார்ஜை அரசாங்கம் கொடுத்துவிடும். கால்வாசிப் பேர் வியாபார நிறுவனங்களைச் சேர்ந்தவர்கள். கம்பெனிகள் செலவைத் தாங்கும்.



பஞ்சாமிர்தம்: அதாவது மக்கள் தாங்கப் போறா அதையும்ன்னு சொல்லு!

ராஜு: ஆமாம். மீதிக் கால்வாசிப்பேர் விஷயம்தான் ஆபத்து. பழைய சார்ஜ் வாங்கிண்டு அதற்கான தூரத்திலே இறக்கி விட்டுடு! நான் அட்லாண்டிக் மகாசமுத்திரத்திலோ பசிபிக் கடலிலோ குதித்துப் போக வேண்டிய தூரம் வரை நீந்திப் போய் விடுகிறேன் என்று சொல்ல வேண்டியதுதான்.

பஞ்சாமிர்தம்: பேஷ்! பேஷ்! நம்ப நிதி மந்திரியை அவசியம் பாராட்டியாகணும்டா! ஒரு தந்தி எழுதித் தரேன். கங்ராஜுலேஷன்ஸ் தந்தி! கொடுத்துட்டு வா!

ராஜு: உஷ், தந்தி சார்ஜ் ஏறிப் போச்சு! நல்ல வேளையா கார்டு தபாலிலே கை வைக்கலே! உங்க பாராட்டு பத்து பைசாவோடேயே நிற்கலாம்.

பஞ்சாமிர்தம்: டேய், ராஜு! எனக்கு ஒரு சின்னச் சந்தேகம்! அதிக வரிக்கு அகப்படாமத் தப்பின விஷயம் ஏதாவது உண்டா?

ராஜு: எனக்குத் தெரிந்த கத்திரிக்காய் வாழைக் காய்க்கு டாக்ஸ் போடலே! ஹும்! நம்ப கறிகாய்க் கடைப் பிச்சை அவனாகவே அதுக்கும் டாக்ஸ் போட்டுடுவான்!

பஞ்சாமிர்தம்: ஹா! பிரமாதமான ஐடியா! எடுடா, பேப்பர் பேனாவை! எழுதிக்கோ! நான் எலக்ஷனிலே நின்னு எம்.பி.யாக வந்து மத்திய மந்திரி சபையிலே நிதி இலாக்கா பொறுப்பை வகிக்கப் போவதில்லை. அதற்காக எனக்கு ஐடியா இல்லேன்னு சொல்லிட முடியுமா? எழுதிக்கோடா! அயிட்டம் ஒன்று. இட்டிலிக்கும் சப்பாத்திக்கும் ஐம்பது சதவிகிதம் எக்ஸைஸ்!.... இதனாலே சுமார் எழுபத்து மூணு கோடி வரவு.

ராஜு: அப்பா... இதென்ன பே...பே....

பஞ்சாமிர்தம்: பேத்தல் இல்லேடா...! பேராலோசனை!... அயிட்டம் இரண்டு. கல்யாண வரி. நாட்டில் நடக்கும் கல்யாணம் ஒவ்வொன்றுக்கும், மொத்த செலவில் முப்பது சதம் வரி. கல்யாணப் பரிசோதனை ஆபீஸர்கள் நியமிக்கப்படுவார்கள். இதனால் எதிர்பார்க்கப்படும் வரவு நூற்று எழுபது கோடி. இந்த வரி கொடுக்காமல் டிமிக்கி கொடுக்க நினைப்பவர்களைப் பற்றி ஒரு ஷரத்தும் உண்டு. பிரம்மச்சாரி வரி என்று போட்டு முப்பது வயதுக்கு மேல் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருப்பவர்களுக்கு வருமானத்தில், ஐம்பது சதவிகிதம் சர் சார்ஜ். இதன் மூலம் நாற்பத்து மூன்று கோடி ரூபாய் வரவு. அப்புறம்.....

ராஜு: அப்பா! அயிட்டங்கள் அபாரம்! ஒவ்வொரு வீட்டிலும் தண்ணீர் வைத்துக் கொள்ளும் மண் பானையை விட்டு விட்டீர்களே!......அது சரி. ரொம்பத் துல்லியமாக அத்தனை கோடி வரவு. இத்தனை

கோடி வரவு என்கிறீர்களே! அதெப்படி இங்கே உட்கார்ந்த மாத்திரத்தில் கணக்குப் போடுகிறீர்கள்? புள்ளி விவரங்கள் வேண்டாமோ?

பஞ்சாமிர்தம் : அரசாங்கப் புள்ளி விவரங்கள் மாத்திரம் ரொம்ப அரிச்சந்திரன் கணக்கோ? அவங்க போடற மாதிரி நடக்கிறதோ? அவங்க துண்டு விழறதுங்கறாங்க! கடைசியிலே துண்டு கோமணத் துணியாத்தான் நிக்கறதுன்னு சில பேர் சொல்லுறா. வேறு சிலர் வேஷ்டியா நீண்டு போகும் என்கிறா. எப்படி யானாலும் அதிக வரிகள் மட்டும் நம் பிராணனை வாங்கறது... அப்படியே அடுத்த பட்ஜெட்டுக்குப் போறாங்க...! இதெல்லாம் கண் துடைப்புக் கணக்கு! கணக்குக்கும் நடைமுறைக்கும் எங்கே சம்பந்தம் இருக்கு? சரி, அடுத்த அயிட்டம்... இதையெல்லாம் அடுத்த வருஷ பட்ஜெட்டுக்கு அரசாங்கம் உபயோகப்படுத்திக் கொள்ளட்டுமே! எக்ஸைஸ் அட்வைசர்ங்கற பட்டமாவது கொடுக்க மாட்டார்களா?

(டெலிபோன் மணி அடிக்கிறது. ராஜு போன் எடுத்துப் பேசிவிட்டு வருகிறான்.)

ராஜு : அப்பா!.... உங்களை உங்க ஃபிரெண்ட் ராமாமிர்தம் அவசரமாகக் கூப்பிடுகிறார்.

பஞ்சாமிர்தம் : ராமாமிருதமா? கழுத்தறுப்பன்னு...? ஏதாவது பொலிக விஷயமா? சரி சரி பேசித் தொலைக்கிறேன்!... (போனில்) ராமாமிர்தமா? வணக்கம் வணக்கம்...! என்ன? இன்னிக்குச் சாயங்காலமா? பரவாயில்லே. ஜமாய்த்துடலாம்! ஸ்டேட் மந்திரியே தலைமை தாங்கறாரா?.. வெரிகுட்! ராமாமிருதம்...!.. சும்மா சொல்லப்படாது! வொண்டர்புல் பட்ஜெட்!... நான் அன்னைக்கே சவானுக்கு ஒரு பாராட்டுத் தந்தி கொடுத்துட்டேன்!.... லியாகத் அலிகான் காலத்திலிருந்து இந்திரா காந்தி காலம் வரை எந்த பைனான்ஸ் மினிஸ்டரும் இப்படி ஒரு சோஷலிஸ்ட் அவுட்லுக் உள்ள பட்ஜெட் சமர்ப்பிச்சதில்லே! சவான் சமன் இல்லேயோ! கொன்னுட்டார்! நீ கவலைப்படாதே!..பட்ஜெட்டை ஆகாயத்திலே தூக்கி வைச்சு அமர்க்களமாக அரை மணி நேரம் பேசிடறேன்! தலைமை தாங்கற மந்திரி அசந்து போயிடமாட்டாரா!சரி! கரெக்டா காரை நாலு மணிக்கு அனுப்பிச்சுடுங்கோ!...

(போனை வைத்துவிட்டு முகத்தைத் துடைத்துக் கொள்கிறார்.)

ராஜு: (திகைப்புடன்): என்னப்பா இது! உங்களுக்கு இரட்டை நாக்கா!... ராமாமிருதம் என்ன சொன்னார்?

பஞ்சாமிர்தம் : அப்படிக் கேளுடா ராஜா! அவர் கிளப்பில் இன்று ஒரு கூட்டமாம். மத்திய ஸ்டேட் மந்திரி தலைமையில் நான் பட்ஜெட்டைப் பற்றிப் பாராட்டிப் பேசப் போகிறேன்! ராமாமிருதம் காரியவாதி! ஏதோ வெளிநாட்டு யாத்திரை டெலிகேஷனிலே இடம் பிடிக்க மத்திய நிதி மந்திரியைத் தட்டிக் கொடுத்துக் காக்காய் பிடிக்கிறான்! நான் ஏன் வறட்டு லட்சியம் பேசிச் சும்மா இருக்கணும்? நானும் அந்த மந்திரி பார்வையிலே விழுந்தால் எனக்கும் யோகம் அடிக்கலாமே!....இதெல்லாம் ராஜதந்திரம்! காரியவாதிக்கு இரட்டை நாக்கு போதாது! இரண்டு டஜன் நாக்கு வேணும்! தெரிஞ்சுதா!... நான் இப்போ காரியவாதி! போயி லாண்டரியிலிருந்து என் துணிமணிகளை வாங்கி வா!

(உள்ளே போகிறார். பெரியநாயகியும் ராஜுவும் திகைத்து நிற்கிறார்கள்.)



காரில் சென்று கொண்டிருந்த ஸ்மைலர்ட், ஆயுதமேந்திய இரண்டு திருடர்கள் ஒரு வீட்டில் புக முனைவதைக் கண்டார். உடனே காரை நிறுத்திவிட்டுச் சாமர்த்தியமாக இரண்டு திருடர்களையும் பிடித்து ஆயுதங்களைப் பறிமுதல் செய்தார். தகவலறிந்து வந்தனர் போலீஸார். திருடர்களை ஒப்படைத்துவிட்டுப் புறப்பட்டவரிடம், அபராதம் கட்டும்படி கூறினர் போலீஸார். இவரோ தமக்கெதற்கு அபராதம் என வினவினார். திருடர்களைப் பிடிப்பதற்காகக் காரை நிறுத்தியபோது "நோ-பார்க்கிங்" பகுதியில் நிறுத்திவிட்டார்! அதற்காகவே அபராதம் விதிக்கப் பட்டது. இது நடந்தது இங்கிலாந்தில்.

நியூ டைம்ஸ் - 'விகாசன்'

## வேதாரண்யத்து வேழமுகர்

தஞ்சாவூர் ஜில்லா திருத்துறைப்பூண்டி தாலுகா வேதாரண்யம் க்ஷேத்திரத்தில் அமைந்துள்ள சிவபெருமான் திருக்கோயிலில் தெற்கு முகமாக எழுந்தருளிய ஸ்ரீ கற்பக விநாயகர் "வேதாரண்யம் ஸ்தல புராண"த்தில் வெகுவாக பாடல் பெற்றவர். ஸ்ரீ கற்பக விநாயகருக்குத் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்ய ஆஸ்திகப் பெருமக்கள் நன்முயற்சி செய்து வருகின்றனர். வேண்டுவோர்களுக்கு விரைந்து அருள் புரியும் இப்பெருமானின் திருப்பணிக்கு ஆஸ்திக அன்பர்கள் தங்களால் இயன்ற பொருளுதவியைச் செய்யும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். பொருளுதவியை டாக்டர் ஆர். கோபாலன், செயலாளர், திருப்பணிக் கமிட்டி, வடக்கு வீதி, வேதாரண்யம் என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டப்படுகின்றனர்.

## மணமான தம்பதியர்

கணவன்–
மனைவி
இருவருக்கும்
ஏற்றது

இதோ ஒரு புதிய, முற்றிலும் சோதிக்கப்பட்ட
வசதியான கருத்தடைச் சாதனம்...

# டெல்ஃபென் க்ரீம்

## கருத்தடை க்ரீம்




டெல்ஃபென் என்பது என்ன?

டெல்ஃபென் ஒரு உடனடியாகப் பயன்தரும் கருத்தடை க்ரீம்.

டெல்ஃபென் மென்மையானது, எரிச்சல் அளிக்காதது.

டெல்ஃபென் உபயோகிக்க இன்பமானது ஏனெனில் அதிலே ஒரு மென் மணம் உண்டு. எண்ணெய்ப்பசையற்ற அது உடைகளைக் கறை படுத்தாது.

டெல்ஃபென் உபயோகிக்க எளிதானது, வசதியானது. தேவைப்படும்போது மட்டுமே அதை உபயோகியுங்கள்.

டெல்ஃபென் சிக்கனமானது. பெரிய எகானமி சைஸ் டியூப் நாற்பது தடவைகள் உபயோகிக்கப் போதுமானது: 'ஒரு தடவை உபயோகிக்கும் செலவு 15 காசு மட்டுமே.

டெல்ஃபென் வைத்தியர் குறிப்பு இன்றியே மருந்துக் கடைகளில் தயாராகக் கிடைக்கிறது.

டெல்ஃபென் பற்றிய விவரங்கள் யாவும் உங்கள் டாக்டருக்குத் தெரியும். அதை உபயோகிக்கும் முறைபற்றி அவரே விளக்குவார்.

டெல்ஃபென் அமெரிக்காவிலுள்ள ஆர்தோ பார்மஸூடிகல் கார்பொரேஷனைச் சேர்ந்த விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்பட்டது. ஆர்தோ நிறுவனம் கருத்தடைச் சாதனங்களின் ஆராய்ச்சியிலும், அபிவிருத்தியிலும் நிபுணத்துவம் பெற்றது. இதை மனதில் கொண்டுதான், டாக்டர்கள் ஆர்தோ தயாரிப்புக்களை சிபாரிசு செய்கின்றனர். இலட்சக்கணக்கான மக்கள் தினமும் டெல்ஃபெனை நம்புகின்றனர்.

50கி' 100கி, டியூபுகள் மற்றும் கையடக்கமான பிளாஸ்டிக் பைகளில் டெல்ஃபென் இப்போது கிடைக்கிறது. புதிய 2.5கி. அப்ளிகேடர் மூலம் டெல்ஃபெனை உபயோகித்து மேலும் சிக்கனம் செய்யுங்கள்.

விளக்கப்படங்களுடன் கூடிய இலவச கைப்புத்தகத்திற்கு எழுதுக:

டிபார்ட்மெண்ட் எஸ், எத்னூர் லிட்., 30ஏ, ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்–26.

**டெல்ஃபென் க்ரீம்** நம்பிக்கையின் மறு பெயர்

பதிவு பெற்ற டிரேடு மார்க்.

JAISONS-185 TAM

**ப**ஸ்ஸில் இடம் பிடித்து உட்கார்ந்ததும், உமா திருப்தியுடன் பெருமூச்சு விட்டபடி, வெய்யில் தகித்துக் கொண்டிருந்த சாலையையும், கட்டடங்களையும், நாலு ஆள் உயர சினிமா விளம்பரங்களையும் ஒரு முறை பார்த்துக் கொண்டாள். புதிதாகக் கிடைத்த வேலை, இரண்டு வாரங்களில் வரப் போகும் இருபது ஆண்டு நிறைவு, கையில் இருந்த முதல் நாள் வாங்கிய அழகான கைப்பை.... இப்படி மனத்தை மகிழ்ச்சியில் துள்ள வைக்கும் எத்தனையோ விஷயங்கள்.

மவுண்ட் ரோட்டில் நாற்சந்தி விளக்கில் சிவப்பு எரிந்ததும் பஸ் நின்றது. அப்படி நிற்கும் போது இறங்குவது ஆபத்து என்பது அவளுக்குத் தெரியும். ஆனாலும் அடுத்த 'ஸ்டாப்'பில் இறங்கினால், திரும்ப ஒரு பர்லாங்கு தூரம் வந்த வழியிலேயே நடக்க வேண்டும்.

கண்டக்டர் தடுத்துச் சொல்ல வாயெடுக்கு முன் சட்டென்று இறங்கினாள். கழுத்தின் ஒற்றை செயின், தோள் வழியே இறங்கிய மலர்ச் சரம், சேலையின் பிடிப்பில் தெரியும் முதுகின் வாய்க்கால், இவைகளைப் பார்த்து ஒதுங்கும் பார்வை அலைகளும் கூடவே இறங்கின.

அடுத்த வரிசையில் நின்ற பஸ்ஸிலிருந்து அந்த வாலிபன் இறங்கினான். நாலெட்டாய் சாலையைக் குறுக்கே கடந்து போனான். அந்த முகத்தை எங்கேயோ பார்த்த ஞாபகம். கடற் கரையிலோ? சினிமாவிலோ? பஸ்ஸுக்காகக் காத்து நின்ற நேரத்திலோ? சரியாக நினைவில்லை. ஆனால் நெஞ்சப் பதிவில் கொஞ்சம் நாட்களாகப் பழகியிருந்த முகம் அது.

நெற்றியில் விழுந்த முன் மயிரை அவசரமாகத் தள்ளி விட்டுக் கொண்டு, அவளைத் திரும்பிப் பார்க்காமலே போய் விட்டான் அவன். எதிர்ச்சாரியில் இருந்த கட்டடம் ஒன்றில் அவன் நுழைவதைப் பார்த்ததும், நிமிர்ந்து விளம்பரப் பலகையைப் பார்த்தாள் உமா. 'பரணி புத்தகப் பூங்கா'- எப்படியெல்லாம் விதம் விதமாகப் பெயர் வைக்க ஆரம்பித்திருக்கிறார்கள் ?

காரியாலயத்துக்குள் நுழைந்து, குடையையும், சிற்றுண்டிப் பையையும் 'ஷெல்பி'ல் வைத்துவிட்டு, டைப் செய்யும் இயந்திரத்தின் முன்னால் உட்கார்ந்த பின்னும், அந்த நினைவு வளைய வந்து கொண்டிருந்தது. சுருக்கெழுத்தில் எழுதிக் கொண்ட குறிப்பை, பிறகு நிதானமாக பொருள் பிரித்து எழுதுவதைப் போல, நினைவுத் துணுக்குகளில் தெரிந்தவற்றை, சிறிது சிறிதாக மனம் ஒப்பிச் சேர்த்து அழகு பார்த்துக் கொண்டிருந்தது.

அவள் இன்னும் ஒருகணம் நின்று கவனித்திருக்கலாம். அவன் அங்கே வேலை செய்கிறானோ? அல்லது புத்தகம் ஏதும் வாங்க வந்தானோ? காலை வேளையில், புத்தகம் வாங்க அத்தனை அவசரம் எதற்கு? அந்தப் புத்தகக் கடைக்கு வாசல் முழுவதும் கண்ணாடிதான். அதன் வழியே ஒரு கணம் பார்த்திருந்தால் அவளுக்குப் புரிந்திருக்கும். ஆனால் அவள் கவனிப்பதை அவனும் திரும்பிப் பார்க்க நேர்ந்து விட்டால் ?

நடக்காத ஒரு செயலுக்காக உடல் ஒரு முறை சிலிர்த்தது. உள்ளிருந்து மணி சப்தம் கேட்டதும், சுருக்கெழுத்து நோட்டு, பென்சில், இரண்டையும் சேகரித்துக் கொண்டு, நினைவுகளைக் கலைத்து ஒதுக்கிவிட்டு உள்ளே போனாள்.

**பி**சுபிசு என்று மழை தூறிக்கொண்டிருந்தது. குடையைப் பிரித்துக் கொண்டு, மார்போடு சிற்றுண்டிப் பையையும், கைப் பையையும், காரியாலயத்துச் சுழல் வாசக சாலையில் எடுத்து வந்த பத்திரிகையையும் நழுவாமல் அணைத்துப் பிடித்தபடி நடைபாதையில் மெல்ல நடந்து வந்தாள் உமா.

அன்று அவளுடைய பஸ் கொஞ்சம் தாமதம். அந்த வாலிபன் முன்னாலேயே வந்து அங்கே நுழைந்திருப்பான். தினந்தோறும் அவன் வருவதையும், அங்கே நுழைவதையும், பார்ப்பது இப்போது அவளுக்கு ஒரு பழக்கமாகி விட்டது. அன்று, முதல் ஒரு மணி நேரத்துக்கு, தாமதமாக வர அனுமதி கேட்டு வாங்கிக் கொண்டிருந்தாள் உமா. அந்தப் புத்தகப் பூங்காவினுள் நுழைந்து பார்த்து விடலாம் என்று ஒரு தைரியம். காலையிலிருந்தே அதற்காகத் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்தாள்.

குடையைப் பாதி மடக்கியபடி, தயங்கி உள்ளே நுழைவதற்காக நின்றவளை, நிமிர்ந்து பார்த்தான் அந்த வாலிபன். யாரோ அழகாகக் கோலம் போட்டு நிமிர்த்தி நிறுத்தியது போல இருந்தது. இடையில் சிறிய வண்ணப் பூக்கள் போட்ட புடவை. பஸ்ஸில் வந்த



துவளல், கசங்கல், எல்லாம் அதில் இலேசாக ஒட்டி இருந்தன.

''உள்ளே வாருங்கள்.''

அவள் நிமிர்ந்து பார்க்கத் தைரியம் இல்லாமல் ஒவ்வொரு புத்தகத்தையும், வரிசைப்படி பார்வையால் துடைத்தபடி நடந்து வந்தாள். நூல் பிடித்தாற் போல அந்த நடை, அளவான இடை அசைவு, பிறுபிறுவென்று பம்மியிருந்த கூந்தலிலிருந்து ஒதுங்கி அலைந்த முன் மயிர், எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டே இருந்தவன் அவள் பார்வை நிமிர்ந்ததும் சட்டென்று முகம் குனிந்து கொண்டான்.

அவன் அந்த வாலிபன் இல்லை.

நொடிப் பொழுதில் அவள் தன் ஏமாற்றத்தை மறைத்துக் கொண்டாள். சற்றுப் பெரிதாகிவிட்ட கண், நீண்டு கன்ன ஓரத்தில் புள்ளியிட்ட புன்னகை, இவைகளில் அந்த ஏமாற்றம் சட்டென்று மறைந்து போயிற்று.

''என்ன புத்தகம் வேண்டும், உங்களுக்கு?''

'' 'கொடி மலர்' — சுஜயா' எழுதியது.''

முந்தைய வாரம்தான் அவள் அந்தப் புத்தகத்தைப் படித்திருந்தாள். சட்டென்று அந்தப் பெயர்தான் நினைவுக்கு வந்தது.

''இப்போது இல்லே. இந்த வாரம் வரும். ஆனால் அதே ஆசிரியர் எழுதிய வேறு புத்தகங்கள் இருக்கின்றன. பார்க்கிறீர்களா ?'' அவன் குரலில் ஒரு பெருமை தொனித்தது. அதன் காரணம் அவளுக்குப் புரியவில்லை. கண்ணாடிப் பரப்பில் அவள் எடுத்து வைத்த புத்தகங்களைப் பார்த்தபடி விரலால் ஒவ்வொன்றாக ஒதுக்கினான்.

'' நாங்கள், வாசக சாலைகூட நடத்துகிறோம். நீங்கள் புத்தகங்களை வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போகலாம். ஒரு வாரம் வரைவைத்துக்கொள்ளலாம். நாவல்கள், கட்டுரைகள், பத்திரிகைகள் எல்லாம் உண்டு. மாதம் சந்தா இரண்டு ரூபாய்.''

அவள் சிரித்துக் கொண்டே நிமிர்ந்தாள்; அவனுடைய வியாபார சாமர்த்தியத்தை வியந்தபடி. அவனிடம் இப்போது அவளுக்குத் தனியான கூச்சம் எதுவும் இல்லை. அவன் அவள் எதிர்பார்த்து வந்த வாலிபன் இல்லை.

புத்தகம் எதையும் வாங்காமலே வந்துவிட்டாள்.

பிற்பகல் சிற்றுண்டி ஓய்வின்போது, மேஜைக்கு வந்திருந்த வாரப் பத்தி



ரிகையைப் புரட்டித் துணுக்குகளைப் படித்துக் கொண்டிருந்தாள்.

"எக்ஸ்க்யூஸ் மீ."

குரலைக் கேட்டு, பேச்சு வந்த திசையில் முகத்தைக் கண்டு அடையாளம் புரிந்து கொள்ள இரண்டு விநாடிகள் பிடித்தன. காலையில் புத்தகக் கடையில் பார்த்த அந்த வாலிபன்தான்.

"உங்கள் குடையை வைத்துவிட்டு வந்து விட்டீர்கள்."

மழை நின்றதும் குடையின் ஞாபகமும் இல்லை. மாலையில் வீட்டுக்குப் போகும் போது ஞாபகம் வந்திருக்கும். அப்போது நேர்ந்திருக்கக் கூடிய கொஞ்ச நேரத்து மனத் தாங்கல், வீட்டுக்குப் போனதும் அவள் ஞாபக மறதிக்காக அம்மா கடிந்து கொள்ளும் பேச்சு எல்லாம் ஒரு நிமிடம் கற்பனையில் தோன்றி நழுவின.

"ரொம்ப தாங்க்ஸ்" என்று குடையை வாங்கிக் கொண்டாள் உமா. "எப்படி நான் வேலை பார்க்குமிடம் உங்களுக்குத் தெரிந்தது?"

"காலையில் உங்கள் கைப் பையில் கவனித்தேன். விலாசம் டைப் செய்த அட்டையை அதில் செருகி இருந்தீர்கள்."

"ஓ!" என்று கைகளைக் குவித்து அவனை விடைகொடுத்து அனுப்பி வைத்தாள். குடையை விட்டு வந்த நினைவு வந்திருந்தால் மறுபடி அங்கே போயிருக்கலாம். அந்தப் புத்தகக் கொலுவுக்கு நடுவே நின்றபடி, மறுமுறை தேடிப் பார்த்திருக்கலாம்; பஸ்ஸிலிருந்து இறங்கிப் போன அந்த வாலிபனின் முகத்துக்காக.

கையிலிருந்த பத்திரிகையைப் பிரித்துப் படித்தாள். கண்ணைக் கவருகிற மாதிரி முழுப் பக்கமும் படம் போட்டு, நறுக்காக ஒரு தலைப்பும் கொடுத்திருந்தது. அந்தச் சிறு கதைக்கு. படிப்பதற்கு முன்பே சுவாரசியத்தைத் தூண்டுவது போல, மேலே நான்கு வரி விளக்கம் வேறு.

கதையைப் படித்து முடித்த பிறகுதான் எழுதியவரின் பெயரைப் படித்தாள். 'சுஜயா'. அவளுக்குச் சிரிப்பு வந்தது. முந்தைய வாரம் படித்த புத்தகத்தில் — காலையில் புத்தகக் கடை விசாரிப்பில் — இப்போது தற்செயலாகப் படித்த சிறுகதையில். எப்படியோ அந்தப் பெயர் அவளைத் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அந்த எழுத்தாளர் யார்? ஒரு வேளை புத்தகக் கடை வாலிபருக்குத் தெரியலாம்; எப்படிக் கேட்பது? "உங்களுக்கு என்ன 'இன்ட்ரெஸ்ட்' அப்படி?" என்று கேட்டு விட்டால் என்ன பதில் சொல்வது?

எதிர்பாராத விதமாக மழை வந்துவிட்டது. அன்று மாலை. அவள் கையில் குடை கொண்டு வரவில்லை. அந்த மழையில் வீடு வரை குடையில்லாமல் சமாளித்துக் கொண்டு போக முடியாது, நிச்சயமாக.

கொஞ்ச தூரம் நடந்து போக முயன்றவளுக்கு, எதிரே வரிசையாக இருந்த கடைகளின் விளக்குகள் அழைப்பது போல இருந்தது. ஏதாவது ஒரு கடையில் ஒதுங்கலாம். கடை ஓரமாகவே, நனையாமல் கொஞ்ச தூரம் நடைபாதையில் நடக்கலாம். அப்போது தான் நினைவு வந்தது. ஒரு பர்லாங்கு அப்படி நடந்து போனால், புத்தகக் கடை இருக்கிறது. அங்கே அந்த வாலிபன்—மணி—உட்கார்ந்திருப்பான்.

மழைச் சாரல் வழியும் கண்ணாடி ஜன்னல் ஓரமாக ஒரு கணம் நின்றாள் அவள். உள்ளே யாரும் இருக்கும் அடையாளம் இல்லை. ஈர அடியை மிதியடியில் ஒற்றிக் கொண்டு, தயங்கியபடியே மெதுவாக உள்ளே போனாள். சந்தடி இல்லை. உள்ளே போகலாமா? வெளியே திரும்பி விடலாமா? மனம், 'பெண்டுலம்' போல மாறி மாறி ஆடிக் கொண்டிருந்தது.

"நீங்களா?"

கொஞ்சம் அதிர்ந்தே போனாள் அவள். புத்தக அலமாரி ஒன்றின் பின்னால் இருந்து வெளிப்பட்டான் அவன்.

"மழையில் நனைந்து விட்டீர்கள் போல் இருக்கிறதே? குடை இல்லையா?" என்று கேட்டான் மணி.

அவள் இல்லை என்று தலையை அசைத்து விட்டு, முகம் குனிந்து தன் நகங்களைப் பார்த்துச் சிந்திக்க ஆரம்பித்து விட்டாள். விரல்களுக்குக் கோப்பை வைத்தாற் போல் 'பாலிஷ்' ஏற்றிய நகங்கள். அந்த அழகையே அவனும் பார்த்தபடி, தன் குடையை எடுத்துக் கொடுத்தான்.

அப்போதுதான், புத்தகக் கடையின் நடு வழியில் நடந்து போகும் அந்த வாலிபன் உருவம் அவள் கண்ணில் பட்டது. பஸ்ஸிலிருந்து இறங்கிப் போன அந்த வாலிபன், வெளியிலிருந்து சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு, ஓட்டமும் நடையுமாக உள்ளே போனான் அவன். அந்த அவசரத்திலும் அவன் பார்வை அவள்புறம் திரும்பிற்று. அவள் உடலில் மின்னலென ஓர் உணர்ச்சி ஊடுருவிற்று.

"அவர் யார்?"

அவள் கண்ணில் குழம்பிய நாணத்துக்கு அவனுக்குப் பொருள் தெரிந்திருக்க வேண்டும். அதன் நிழலாய் மணியின் முகத்தில் ஒரு ஏமாற்றம் விடிந்தது.

"நிச்சயமாய்த் தெரிய வேண்டுமா?"

"உம்" என்று தலையை ஆட்டினாள். குடையின் துணியை லாகவமாகப் பிரித்தபடி.

"நாளைக்குக் குடையைத் திரும்பக் கொடுக்க வரும் போது சொல்கிறேன்."

மறு நாள் குடையை மேஜை மீது அவள் வைத்த போது அவன் சொன்னான்.

"அவர்தான் உங்கள் அபிமான எழுத்தாளர் 'சுஜயா'. இந்தக் கட்டடத்திலேயே மாடி அறையில் இருக்கிறார்."

அவன் பதிலில் அவள் இதழ்களில் புன்னகை அரும்பிற்று. அவனும் சிரித்துக் கொண்டே சொன்னான். அவன் பேச்சில், பழக்கத்தில் இதமான உணர்ச்சி ஒன்று தெரிந்தது அவளுக்கு. ஆனாலும் அவள் மனத்தில்

இன்னும் பழைய ஏக்கத்துக்குத்தான் இடம் இருந்தது.

'' அவரை எனக்கு அறிமுகம் செய்து வைக்கிறீர்களா ?''

''ஓ. எஸ்.''

அந்த வாலிபனின் கையெழுத்திட்ட புத்தகங்கள் இரண்டு கிடைத்தது உமாவுக்கு. க. ஜயராமன் என்ற பெயரைச் சுருக்கி அப்படி ஒரு புனைபெயரா ?

வீட்டில் வெளிச்சமும் காற்றும் தோய்ந்து கிடக்கும் ஜன்னல் ஓரம், கட்டிலில் சாய்ந்து கொண்டு புத்தகத்தை மெல்லப் படித்தாள் அவள். கண்ணுக்கும் மனத்துக்கும் ஓர் இதம், அந்த வருணனைகளைப் படிக்கும் போது. எவ்வளவு அழகாக எழுதுகிறார் அவர் ? மனத்துக்கு நெருங்கிய உணர்ச்சிகளை எப்படிப் படம் பிடித்துக் காட்டுகிறார் சில இடங்களில்? கன்னம் சிவக்க, மனத்துள் கூச்சம் படரப் புத்தகத்தை மூடி வைத்தாள்.

புத்தகக் கடையில் அன்று மூவருமாக உட்கார்ந்து காப்பி அருந்தினார்கள். கொஞ்சம் நாணத்தை வென்று பேசுவதற்கு ஜயராமனின் புத்தகங்களைப் பற்றிய விஷயம்தான் கிடைத்தது அவளுக்கு. அவன் ஒரு புன்னகையோடு அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தான். பதிலுக்கு அவள் ரசனையைப் பாராட்டி இருக்கலாம்.

மணி அவர்கள் இருவரையும் தனியே விட்டு விட்டுக் கணக்குகள் பதியப் போய்விட்டான். ஒரு முறை சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, பையிலிருந்து தான் எழுதிய சிறுகதை ஒன்றை எடுத்து மேஜை மேல் வைத்தாள் அவள்.

''படித்துச் சொல்லுங்கள். நீங்கள் நன்றாக இருக்கிறதென்று சொன்னால் நான் ஏதாவது ஒரு பத்திரிகைக்கு அனுப்பலாம் என்று இருக்கிறேன்.''

அவன் திகைத்துப் போனான். ஆனால் கண்ணிமையில் தெரிந்த அந்தச் சிறு அதிர்ச்சியைச் சட்டென்று அடக்கிக் கொண்டான்.

'' படிப்பது என்ன? ஓரளவு திருத்தி மெருகிட்டும் கொடுக்கலாம். உங்களுக்கு ஆட்சேபணை இல்லையே ?''

அவள் எதிர்பார்க்கவில்லை, அந்தப் பதிலை. அவனுடன் சிறிது நேரம் உட்கார்ந்திருப்பதே ஓர் அநுபவம்தான். அவன் பேசுவது, சிரிப்பது, பார்ப்பது, எல்லாமே தனி. அந்தப் பதிலைக் கேட்டதும் அவள் மனம் தவித்த தவிப்பு ?

'' உங்கள் சௌகரியப்படி செய்யுங்கள்.''

இரண்டு நாட்கள் அவகாசம் கொடுத்துப் போனான் அவன். ஜயராமன் அங்கே வரவில்லை. மணிதான் அவளோடு பேசினான். கடைசியில் அந்தக் கவரை எடுத்து மேஜை மேல் வைத்தான்.

'' உங்கள் சிறுகதை.''

அவளுடைய புருவங்கள் வியப்பில் நெரிகையில், நெற்றிக் திலகம் சுருங்கி நெளிந்தது.

'' உங்களிடம் கொடுக்கச் சொல்லிக் கொடுத்து விட்டுப் போனான். நானும் படித்துப் பார்த்தேன். இலேசாகச் சில திருத்தங்கள் செய்திருக்கிறான். எந்தப் பத்திரிகைக்கு அனுப்பினாலும் நிச்சயம் பிரசுரமாகும்.''

கொஞ்ச நேரம் அவளால் பதில் சொல்ல முடியவில்லை. உடலில் ஒரு சிலுசிலுப்பு ஓடிற்று. கண்ணில் அதன் நிழல் தெரியாமல் அடக்கிக் கொள்வது சிரமமாக இருந்தது. அவன் இருந்திருக்கலாம். அவனே நேரில் சொல்லிக் கொடுத்திருக்கலாம். இந்த மகிழ்ச்சி அப்போது இன்னும் எவ்வளவோ அதிகமாக இருந்திருக்கும்.

அவ்வளவையும் மறுபடியும் அச்சுக் கோத்தாற் போல அழகாக எழுதினான். சில வாக்கியங்களை அடித்திருந்தான். சில சொற்களை மாற்றி இருந்தான். இரண்டொரு இடங்களில் பக்கத்துக்குப் பக்கம் அவனே சில வரிகளை எழுதிக் கூட்டி இருந்தான். கதைக்கு இப்போது எவ்வளவோ மெருகேறி விட்டது. அந்த ரசவாதம் அவனுடைய வித்தை. அந்த நினைப்பில் அவளுடைய மனமே பொன்னாக மினிர்ந்தது. அந்த எழுத்துக்காகவா? அந்த முகத்துக்காகவா ?

அடுத்த தடவை பார்க்கும் போது, என்னென்ன சொல்ல வேண்டும் என்பதை மனத்தளவில் குறித்துக் கொண்டாள். கதையைத் தபாலில் அனுப்பிவிட்டு அவனைச் சந்திக்கப் போனாள். கடை வாசலிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தான் ஜயராமன். அவளைக் கண்டதும் கீழுதடு புன்னகையில் பிதுங்கிற்று.

## கனிந்த பக்தி

பத்ரிநாத்தை நோக்கிப் பல பக்தகோடிகள் கூட்டம் கூட்டமாகச் சென்று கொண்டிருந்தனர். அப்படிச் சென்று கொண்டிருந்த ஒரு பக்தர் குழாத்தில் இரண்டு கண்களும் தெரியாத ஒரு பக்தன் இடம் பெற்றிருந்தான். கண் தெரியாத அந்தப் பக்தனுக்கு உடன் இருந்தவர்கள் உறுதுணையாக இருந்து



நடத்திச் சென்று கொண்டிருந்தார்கள். இதைக் கண்ணுற்ற ஒரு பக்தர், ''கண்கள் நன்றாகத் தெரிந்தவர்களே செல்லத் தவிக்கும் இக்கடினமான பாதையில் இரண்டு நேத்திரங்களும் தெரியாத நீ ஏன் அப்பா, இவ்வளவு அவஸ்தைப்பட்டுக் கொண்டு வரவேண்டும்?'' என்றார்.

அந்தப் பக்தன் கூறிய பதில்:''ஐயா, நீங்களெல்லாம் அப்பனைக் கண்குளிரப் பார்க்கப் போகிறீர்கள் ; நான் அவனைப் பார்க்க முடியாது என்பது என்னவோ வாஸ்தவம்தான். ஆனால் அப்பன் என்னைப் பார்ப்பார், இல்லையா, அது போதும் எனக்கு !''

--கே.எஸ்.பி.

""கதையை அனுப்பியாச்சா ?""

""ஓ. ரொம்ப நாட்கள். அதைச் சொல்லி விட்டுப் போகத்தான் வந்தேன்.""

குறும்பாகக் கண்ணைச் சிமிட்டினான் அவன். 'அதற்கு மட்டும்தானா?' என்று கேட்பதைப் போல. தோளில் குறுக்காக மாட்டிய காமிரா. கை நிறையச் சாமான்களுடன் ஒரு பை.

""எங்கே கிளம்பிக்கொண்டிருக்கிறீர்கள்?""

""பத்திரிகாலயம் வரையில். ஒரு அவசர மான வேலை.""

""புகைப்படம்கூட எடுப்பீர்களா நீங்கள்?""

சட்டென்று தன் கைக் குட்டையை எடுத்து நெற்றியை ஒற்றிக் கொள்வது போல, ஒரு வினாடி முகத்தை மறைத்தும் கொண்டாள் அவள். பிறகு புன்சிரிப்புடன், ""வருகிற சனிக் கிழமை மாலை அண்ணாமலை மன்றத்தில் ஒரு நாட்டிய நிகழ்ச்சி இருக்கிறது. மூன்று டிக் கெட்டுகள் மணியிடம் கொடுத்திருக்கிறேன். நீங்களும் வருகிறீர்களா?"" என்று கேட்டாள்.

மதுவின் பெருவெள்ளமாக ஓர் உணர்ச்சி அவள் காலடியில் பெருகி நின்றது. நிற்க முடியாமல் கால்கள் விட்டுக் கொண்டன. கண்ணைப் பறிக்கும் வர்ணங்களாய் மனதில் மாறி மாறி நெய்த எத்தனையோ காட்சிகள். கதைகளில் படிப்பது போன்ற நிகழ்ச்சிகளின் கற்பனைகள். என்ன பதில் சொல்வான் அவன்?

""உங்களுக்குச் சௌகரியமில்லாவிட்டால் வேண்டாம்.""

""சௌகரியந்தான். நான் இங்கேயே வந்து சேர்ந்து கொள்கிறேன்.""

அவள் கை விரல் உட்புறமாக, அவனுக் காகக் காத்துக் கொண்டிருந்த மணியைச் சுட்டிக் காட்டிற்று. அந்த இடத்தை விட்டு உதறிக் கொண்டு போவதே தவறு போல் ஒரு குறுகுறுப்பு அவனுக்குள் உறுத்திற்று. விடைபெறுவது போலத் தலையை அசைத்து விட்டு, புத்தக வரிசைகளுக்கு நடுவே மெத் தென்று காலடி வைத்தபடி நுழைந்தாள்.

மூன்று டிக்கெட்களை மேஜை மேல் எடுத்து வைத்துவிட்டு நிமிர்ந்தான் மணி.

சனிக்கிழமை காலையிலிருந்தே தயாராக இருந்தாள் உமா, ஒரு 'போன்' செய்தி யாவது வரும் என்று. நாட்டிய நிகழ்ச்சி யைப் பற்றிய விளம்பரத்தை, செய்தித் தாளில், பஸ்ஸின் பின்புறத்தில், அரங்க ஓட் டத்தில் சுவரில் தெரிந்து தழுவி மறையும் நோட்டீசுகளில், அவள் பார்த்து உறுதிப் படுத்திக் கொண்டாள்.

பிற்பகலில், மணி நான்கு வரையில், அவ ளுக்குத் தகவல் ஏதும் கிடைக்கவில்லை. அப் புறம் பொறுமை இன்றி அவளே 'போன்' செய்தாள்.

""என்ன சமாசாரம்? உங்களுக்கு உடம்பு சரி இல்லையா?"" என்று கேட்டாள் உமா.

""தெரியவில்லை. காலையிலிருந்தே எனக்குச் சாப்பாடு சேரவில்லை. இலேசான ஜுரம்."" குரல் தயங்கி வந்தது. ""நீ நேரே மன்றத் துக்குப் போய்விடுவது நல்லது உமா. என்னால் வர முடியும் என்று தோன்றவில்லை. இரண்டு மணி நேரம்கூட இல்லை இன்னும் —""

""நன்றாக இருக்கிறது நீங்கள் பேசுகிறது. நீங்கள் வர முடியவில்லை என்றால் நானும் போகப் போவதில்லை. நான் அங்கே வரு கிறேன், இப்போது.""

அவள் அங்கே போன போது கடையின் வாசற் கதவு ஒருக்களித்து மூடி இருந்தது. உள்ளே ஒற்றை விளக்கடியில் தனியாக உட் கார்ந்திருந்தான் மணி. முகத்தில் ஜுரப் பள பளப்பு. அவளைப் பார்த்தபின்னும் அந்த முகத்தில் சிரிப்போ, மலர்ச்சியோ இல்லை. நெற்றியில் பூத்த வியர்வையை இலேசாக ஒற்றிக் கொண்டாள் உமா.

""நீ கிளம்பவில்லை, உமா...? அவன் சற்று முன்னதாகப் போக வேண்டும் என்று போய் விட்டான்.""

""அவனுடைய டிக்கெட் ?""

""அவசியம் இல்லை. அவனுக்கு இடம் காத் திருக்கும். படங்கள் எடுப்பவர் ஆயிற்றே?""

""சரி. நான் ஒரு டாக்ஸி கொண்டு வரு கிறேன். நீங்கள் வீட்டுக்குப் புறப்படுங்கள். உங்களால் உட்கார்ந்து பேசக்கூட முடிய வில்லை.""

""அங்கே போய்த்தான் என்ன பிரயோச னம்? நான் தனி. என்னைக் கவனிக்கக்கூட யாரும் இல்லை.""

""நான் இருக்கிறேன்"" என்றாள் உமா. ""உங்களை விட்டுவிட்டு நான் எங்கேயும் போக வில்லை."" அவள் குரல் அழுத்தமாக இருந் தது. மறுக்க முடியாத ஒரு பிரியம் அதில் தொனித்தது; பணிய வைப்பதைப் போல.

நான்கு நாட்கள் ஆகிவிட்டன.

பெரிய ஜுரமாக வந்துவிட்டது. மணியை ஒரு 'நர்ஸிங் ஹோமி'ல் சேர்க்க வேண்டிய தாகி விட்டது. காலையில் காரியாலயத்துக் குப் போகுமுன் அவனைப் பார்த்துவிட்டுப் போவாள். திரும்பி வரும் வழியில் பார்த்து விட்டு வருவாள்.

அன்று தபாலில் அவனுக்கு அந்தப் பத் திரிகை வந்திருந்தது. புரட்டிக் கொண்டே நடுப் பக்கத்துக்கு வந்ததும், அவன் விரல்கள் நின்றன. புதிதாக எழுதக் கற்றுக் கொண்டு விட்ட குழந்தையைப் போல, அவன் முகம் பெருமையில் மலர்ந்தது. கண்கள் மகிழ்ச்சி யில் அகல விரிந்தன. அவனுடைய சிறுகதை அங்கே பிரசுரமாகி இருந்தது.

மேலே ஐந்தாறு பக்கங்களைப் புரட்டினாள். அவள் கண்கள் பிரமிப்பில் நிலைத்தன. பளீர் என்று நாலைந்து நினைவுகள் தோன்றி, அடை யாளம் காண்பதற்குள் மறைந்து விட்டன. உட்கார்ந்தவாக்கிலேயே நாற்காலியின் கைகளைப் பிடித்துக் கொண்டாள். தன்னை அறியாமல் வாயைப் பொத்திக் கொண்டாள். வியப்பு அளவு மீறிப் பொங்க, அதை அடக்கிக் கொள்வதைப் போல.

சாயங்காலம் மணியைப் பார்க்கப் போன போது, அவன் சற்றுத் தெளிந்து, தலையணை மேல் சாய்ந்து கொண்டிருந்தான். போனதும் அவன் கையில் ஒரு 'சாக்லெட்'டை வைத் தாள் உமா.

"" என்ன விசேஷம் ?""

""என் சிறுகதை வெளியாகி இருக்கிறது.""

""ஓ. கங்கிராஜுலேஷன்ஸ்.""

அவள் கண்ணில் மறுபடி அந்த வியப்பு படர்ந்த மாதிரி இருந்தது. இரண்டு வினாடி

நேரம் வெறும் வறட்சி தூரத்தையே பார்த்துக் கொண்டிருந்தவள், ''ஆமாம். என்னை ஏன் ஏமாற்றினீர்கள் ?'' என்று கேட்டாள்.

''என்னது? என்ன சொல்கிறாய் நீ?''

''என்னுடைய சிறுகதைக்கு அடுத்தாற் போல, ''சுஜாதா''வின் புகைப்படமும் கட்டுரையும் வெளியாகி இருக்கிறது.''

அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். சற்று முன் தெரிந்த முக மலர்ச்சி மறைந்து விட்டது. ஒரு சோகக் களை பாசி மாதிரி அந்த இடத்தில் படர்ந்தது.

''நீங்கள்தான் அந்த எழுத்தாளர். ஏன் மிஸ்டர் ஜெயராமனை அவ்விதமாக எனக்கு அறிமுகப்படுத்தினீர்கள்? உங்களுக்குத்தெரியுமல்லவா, நான் ஆவலோடு பாராட்டியது அந்த எழுத்தாளரைத்தான் என்று?'' அவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். கண் நிரம்பிக் கலங்கிற்று.

மணி பேசினான். ''கடையில் உட்கார்ந்து நான் கண்ணாடி வழியே வெளியே பார்த்துக் கொண்டிருப்பது உண்டு. பஸ்ஸில் தினந்தோறும் வந்து இறங்கிப் போகும் ஒரு பெண், என் கடைப் பக்கமாக இறங்கி வரும் ஒரு வாலிபனையே ஆவலோடு கவனிப்பதாக நான் நினைத்துக் கொண்டேன்.

''ஒரு நாள் அந்தப் பெண் என் கடையைத் தேடி வந்தாள். நான் எழுதிய புத்தகங்களைப் பற்றி என்னிடமே விசாரித்தாள். நான் அப்போதே சொல்லியிருப்பேன், நான் யார் என்று. ஆனால் என்னும் நிச்சயம் செய்து கொள்ள முடியவில்லை, அவள் என் புத்தகங்களுக்காக, எனக்காகத்தான், அங்கே வந்தாள் என்று.''

அந்தச் சந்தேகத்திலும் தவறில்லைதான். அவள் ஜெயராமன் வந்த போது, அவனைப் பார்த்த போது, அப்புறம் அவனோடு பேசிய போது, பழகிய போது, அந்தச் சந்தேகம் சரி என்றுதான் எனக்குத் தோன்றியது. அவனை அவள் விரும்புகிறாளா? அல்லது அந்த எழுத்துதான் அவளைக் கவருகிறதா? இது எனக்கு நிச்சயமாகவில்லை — அந்தப் பெயர் எனக்கு ஜுரம் என்று தெரிந்ததும், மற்ற எல்லா நினைவுகளையும் உதறிவிட்டு என்னோடு வந்து அமர்ந்து கொள்ளும் வரை.

இப்போது தெரிகிறது. நான் உன்னை ஏமாற்ற வில்லை. நான்தான் ஏமாந்து போனேன். உன் கற்பனையை என்னால் சரி பார்க்க முடிந்தது. உன் எண்ணங்களை என்னால் அனுமானிக்க முடியத்தான் இல்லை.''

''ஓ! அப்படிச் சொல்லி விடாதீர்கள். ஜெயராமனுக்கும் நம்மிடையே இடம் உண்டு'' என்று அழுத்திச் சொன்னாள் உமா. அவள் கண்ணில் படர்ந்த பிரமிப்பு சட்டென்று கலைய, ''நம் இருவரையும் அவர் சேர்த்து வைத்துப் படம் எடுத்தாக வேண்டுமே?'' என்று கூடவே சொன்னாள்.



சரித்திரத்தில் ஓர் ஏடு

# ஆங்கிலேயர்களுக்கு உதவிய ஆயாக்கள்

சிப்பாய்க் கலகமென்று தவறாக அழைக்கப்பட்டு வந்திருக்கிற 1857ம் வருஷத்துச் சுதந்திரப் போராட்டத்தின் போது ஆங்கிலேயர்களுடைய உயிரையும் பொருளையும் காப்பாற்றிக் கொடுத்தவர்களைப் பற்றிய செய்திகள் நமக்கு அதிகமாக அறிமுகமாகாமலே இருந்து வந்திருக்கின்றன.

இப்படிக் காப்பாற்றிக் கொடுத்தவர்களில் பெரும்பாலோர் யார் தெரியுமா? ஆங்கிலேயர் வீடுகளில் ஊழியம் புரிந்து வந்த ஆயாக்கள்! இந்தியப் பணிப் பெண்கள். இவர்களிடம் குடிகொண்டிருந்த எஜமான விசுவாசம், கடமை உணர்ச்சி, நேர்மை ஆகியவை, இவர்கள் தங்கள் உயிரின் மீது வைத்திருந்த பாசத்தையும் விஞ்சி நின்றன. கேளுங்கள் ஒருத்தியின் வீரச் செயலை :

அயோத்தியா நகரில் ஓர் ஆங்கிலேய ராணுவ அதிகாரியின் வீடு. ஒரு நாள் மாலை ஆயா, குழந்தையைக் காற்று வாங்க வெளியே எடுத்துக்கொண்டு போயிருந்தாள். அப்பொழுது திடீரென்று சிப்பாய்கள் கலகத்துக்குக் கிளம்பி விட்டார்கள். இது தெரிந்த அதிகாரியும் அவர் மனைவியும் குழந்தையை வெளியே அனுப்பியிருக்கிறோம் என்பதைக்கூட மறந்துவிட்டு வீட்டிலிருந்து தப்பிப் போய்விட்டார்கள். காற்று வாங்கச் சென்றிருந்த ஆயா கலகம் மூண்டுவிட்டதென்று தெரிந்ததும் குழந்தையைத் தன் சேலையின் முந்தானையால் நன்றாகப் போர்த்தி எடுத்துக் கொண்டு வீடு நோக்கி விரைந்து வந்தாள். வீட்டில் யாரும் இல்லை. எஜமான தம்பதிகள் கலகக்காரர்கள் கையில் அகப்படாமல் தப்பிப் போயிருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொண்டாள். குழந்தையை அவசரம் அவசரமாக ஒரு மூலையில் பாயில் கிடந்த துணிகளுக்கு மத்தியில் மறைத்து வைத்துவிட்டு, வீட்டிற்கு வெளிப்புறம் வந்து கொண்டிருக்கையில் சிப்பாய்கள் ஆரவாரம் செய்து கொண்டு வீட்டிற்குள் நுழைந்து விட்டார்கள். மூலை முடுக்குகளிலெல்லாம் தேடிப் பார்த்தார்கள். யாரும் அவர்கள் கண்ணுக்குத் தென்படவில்லை. அவர்கள் கேள்விக்கு ஆயா பதில் கூறாமல் போகவே ஏமாற்றமும் கோபமும் மிக்க சிப்பாய்கள் ஆயாவை அடித்துப் போட்டு விட்டுப் போனார்கள்.

சிறிது நேரம் கழித்து ஆயா சுரணை தெரிந்து எழுந்து உள்ளே சென்றாள். குழந்தை கை கால்களை ஆட்டிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்ததைக் கண்டாள். அவள் அடைந்த மகிழ்ச்சியைச் சொல்ல வேண்டுமா? அதன் முகத்திலும் உடம்பிலும் கறுப்புச் சாயத்தைப் பூசி அது வெள்ளைக்காரக் குழந்தை அல்ல என்று தோன்றும்படி செய்து விட்டாள்.

பொழுது புலர்ந்தது. ஆயாவும், தன் எஜமான் தம்பதியின் நிலவரம் பற்றி கவலை விசாரித்தாள். அவர்கள் லட்சுமணபுரிக்குச் சென்று தங்கியிருப்பதாகத் தெரிந்தது. உடனே குழந்தையை நன்றாகப் போர்த்தி எடுத்துக் கொண்டு லட்சுமணபுரியை நோக்கி நடந்தாள்.

''சரித்திர மாணாக்கன்''

# கேட்பீர்

ஒவ்வொரு சிறு குரல் அசைவும் தெளிவாக, கணீரென்று கேட்கிறது. அதுதான் மகத்தான டெளுர் தரும் இயற்கையான நாதம்.

வாங்குவதற்கு முன்னர் எல்லா உயர் ரக 4 பாண்ட் ரேடியோக்கள் தரும் ஒலி வகைகளையும் கவனமாகக் கேளுங்கள். வீடு திரும்பும்போது எச்எம்வி டெளுர் தான் கொண்டு செல்வீர்கள் என்பது உறுதி.



## எச்எம்வி டெளுர்

4 பாண்ட்கள், 6 வால்வுகள், ஏஸி

**ரூ. 390-00**

(எக்ஸைஸ் வரி உட்பட, உள்ளூர் வரிகள் தனி)

அதன் விலை வரிசையில் அதுதான் மிக அழகான ரேடியோ



## ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்

GC-6398

H. M.V. யின் சிறந்ததும், சமீபத்தியதுமான சங்கீதத்துக்கு ரேடியோ சிலோனைக் கேளுங்கள். H. M.V. நட்சத்திரக் காட்சி (ஆங்கிலத்தில்) ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9 முதல் 9-30 மணி வரை H. M.V. கீ. சித்தாரே (ஹிந்தி) செவ்வாய்க்கிழமைகளில் மாலை 8 முதல் 8-30 மணி வரை.

வதந்தியினால் ஏற்பட்ட விளைவுகள். வதந்தி காரணமாகவே சட்டம் அமைதிக்குப் பங்கம் ஏற்படுமானால், மதுவிலக்கு எடுபட்டால் கிராமங்களில் அராஜகம் வந்து தமிழக மெங்கும் குழப்பம் ஏற்படும் என்பதில் சந்தேகம் என்ன?

விட்டலபுரம்
27–5–71 வேங்கடாச்சாரி




★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

★மே பதினைந்தேதி ஞாயிற்றுக்கிழமை வானொலியில் வர்த்தக ஒலிபரப்பினிடையே ஒரு தேசியமயமான வங்கியின் விளம்பரத்தைக் கேட்டேன். வாக்கியங்கள் ஏறக்குறைய பின்வருமாறு அமைந்திருந்தன.

''நீங்கள் உழைக்காமலே ஊதியம் பெற வேண்டுமா ? உடனே எங்கள் வங்கியில் உங்கள் பணத்தை வைப்புத் தொகையாகப் போடுங்கள். உங்களுக்கு நீண்ட நாட்களுக்கு நாங்கள் வட்டி தருகிறோம். உழைக்காமலேயே நிரம்பப் பணம் பெற உடனே எங்கள் வங்கியில் உங்கள் பணத்தை முதலீடு செய்யுங்கள்.''

இதைப் போன்ற ஒரு விளம்பரம் நாட்டின் நன்மைக்காகுமா? உழைப்புக்கு நம் நாட்டில் கொடுக்கப்படும் முக்கியத்துவம் இதுதானு? இத்தகைய நிலையில் நம் நாட்டின் எதிர்காலம் இருள் மயமாகத்தானே இருக்கும்.

சென்னை — 59
25–5–71 பி. ஸ்ரீனிவாசராகவன்

பூஜ்ய ராஜாஜி மதுவிலக்குப் பற்றி எழுதும்போது 'ஏராளமான குடும்பங்கள் துன்பத்தில் ஆழ்த்தப்படும்' என்றது கடவுள் வார்த்தையாகும். எப்படிப்பட்ட துன்பங்கள் என்பதைப் பலரும் ஊகிக்கவே முடியாது.

நான் கிராமத்திலேயே பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து வருபவன். முப்பத்தைந்து வருடங்களுக்குமுன் சாராயக் கடை, கள்ளுக் கடைகளிலிருந்தே கொலை, கொள்ளை, கலவர கேஸ்களுக்குத் துப்பு கிடைக்கும். கிராமத்தில் நான்கு மணிக்கு மேல் யாரும் தைரியமாக நடமாடப் பயப்படும் காலம் அது. குடித்துவிட்டுப் பொது இடங்களிலும், சாலைகளிலும், பஜார்களிலும் ஆர்ப்பாட்டம் செய்யும் அவர்களை எதிர்நோக்கப் பெண்களுக்கும் வயோதிகர்களுக்கும் வலு ஏது?

கிராமங்களில் திருட்டுச் சாராய விற்பனை பல்கிப் பெருகி விட்டது. இதனால் மாலை நேரங்களில் இனம் குறிப்பிட்டுத் தெரிந்து கொள்ள முடியாத வேற்று ஆட்கள் நடமாட்டம் ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கிறது. அதன் விளைவு திருட்டுகள். கதவு உடைத்து மூன்று நிலைகளைப் பெயர்த்து நெல், பாத்திரக் களவுகள் சகஜமாகி விட்டன. போலீஸில் புகார் செய்து கொண்டே இருக்கிறோம். என் கிராமத்துக்குப் பக்கங்களில் உள்ள ஊர்களில் குடிவெறி காரணமாகப் பட்டப்பகலிலேயே கொலைகூட நடைபெறுகிறது. இதெல்லாம் மதுவிலக்கு எடுபடப் போகிறது என்ற

ஏழை, எளிய, நடுத்தரக் குடும்பங்கள் மீது சுமப்பதற்கரிதான வரிப் பளுவை சுமத்திவிட்டார் நிதிமந்திரி. ஏற்கனவே ஏழை, எளிய, நடுத்தர மக்களுக்கு அட்டையைப் போல மத்திய அரசு வரிகளைப் போட்டு அவர்களது இரத்தத்தை உறிஞ்சிவிட்டது. மேலும் புதிய வரிகளைப் போட்டு அவர்களை இந்நாட்டில் வாழ விடாதபடி செய்துள்ளது மத்திய அரசு. எழுபத்தொன்று தேர்தலின் போது இதே ஏழை, எளிய, நடுத்தர மக்கள்தான் இந்திரா காங்கிரசுக்கு அவர்களது ''வறுமையை ஒழிப்போம்'' என்ற கோஷத்தை நம்பி வாக்களித்தார்கள். ஆனால் பதவியை அடைந்தவுடனேயே வறுமையை ஒழிப்பதற்குப் பதிலாக வறுமையை வளர்க்கும் வண்ணம் வரிவிதிப்பு உள்ளது. ''வறுமையை ஒழிப்போம்'' என்பது தேர்தல் கால 'ஸ்டண்டா?' அல்லது ஏழையின் வயிற்றில் அடிப்பதுதான் ஸ்ரீமதி இந்திராவின் சோஷலிசமா ?

பெருங்குளம்
29–5–71 ஆர். வி. மோசஸ்

சமீபத்தில் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அவர்கள் போன்று ஒருவர் போனில் பேசி, தில்லி ஸ்டேட் பாங்கில் ரூ. 60 லட்சம் மோசடி செய்தது பற்றிப் பார்லிமெண்டில் உறுப்பினர்கள் கண்டனக் குரல் எழுப்பி வருகிறார்கள்.

பிரதமர் தம் பெயரில் பாங்கியில் கணக்கு வைத்துள்ளாரா ? அல்லது பாங்கியின் பிரதம காஷியர் பிரதமருக்கு அறிமுகமானவரா என்பன போன்ற கேள்விகள் அவையில் கேட்கப்பட்டு வருவதோடு, இதற்கான நீதி மன்ற விசாரணை ஒன்று தேவை என்றும் பலதரப்பட்ட கட்சி உறுப்பினர்கள் வலியுறுத்தி வருகின்றனர்.

''இதற்கு முன்னும் பிரதமர் அவர்கள் இதுபோன்று போனில் கேட்டிருப்பாரோ ? யாதொரு அத்தாட்சியும் இன்றிக் காஷியர் அறுபது லட்சம் ரூபாய் எடுத்து வந்து தரத் துணிந்தது எவ்வாறு ?'' என்பன போன்ற பல சந்தேகங்கள் தற்போது நாடெங்கிலும் எழுந்துள்ளன.

ஆகவே, இது பற்றி ஆராய நீதிமன்ற விசாரணை தேவை என்ற உறுப்பினர்களின் வலியுறுத்தலை மத்திய சர்க்கார் அலட்சியமாக ஒதுக்கிவிட முயன்றால் அதுவே மக்களின் மனத்தில் மேலும் சந்தேகங்களைத் தோற்றுவிக்கும்.

சைதாப்பேட்டை
29–5–71 தன சுந்தரம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31

Managing Editor: T. Sadasivam

